ரிஜிஸ்டர் நெ. M. 4514

விலை 2

ஒன்றுபட்டாலுண்டு
வாழ்வே—நம்மில்
ஒற்றுமை நீங்கி
லனைவர்க்கும்
தாழ்வே
நன்றிது தேர்ந்திடல்
வேண்டும்—இந்த
ஞானம் வந்தாற்பின்
நமக்கெது
வேண்டும்!

# ஜனசக்தி

இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி
தமிழ்நாட்டுக் கமிட்டியின் வாரப் பத்திரிகை



உழவுக்குந்
தொழிலுக்கும்
வந்தனை செய்வோம் -
வீணில்
உண்டு களித்
திருப்போரை
நிந்தனை செய்வோம்
விழலுக்கு
நீர் பாய்ச்சி
மாய மாட்டோம்—
வெறும்
வீணருக் குழைத்
துடலம்
ஓய மாட்டோம்.

இதழ் 13

30-12-1942 புதன்கிழமை

ஆசிரியர்:
பி. ராமமூர்த்தி

# அச்சுநாடுகளின் தோல்வி யாருக்கு உதவி?

## இந்திய மக்களுக்கா அல்லது ஏகாதிபத்தியவாதிகளுக்கா?

தோழர்
[பி. ஸி. ஜோஷி]

இந்தியாவோடு சமரசம் தேவையில்லை, நாம்தான் இப்போது வெற்றியடைந்துவருகிறோமே என்று நியாயம் பேசுகிறார்கள் ஏகாதிபத்திய வாதிகள். பிரிட்டிஷார் இப்போது வெற்றியடைந்து வருகிறார்கள், ஆகவே தேசீய சர்க்கார் ஏற்பட வழியில்லை என்று சாதாரணமாக இந்திய தேசபக்தர்கள் வாதிக்கிறார்கள். இந்த இரண்டுபேரும் ஒரேமாதிரி நினைக்க முடியாது. ஆனாலும் இந்தப் பிரச்சினையில் இரண்டுபேரும் ஒரே அபிப்பிராயத்தைக் கூறுவதாகவே தெரிகின்றது. வெற்றிகள் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வாதிகளுக்கா! இவை யாருடைய வெற்றிகள் என்பதைப் பார்ப்போம்; யாரைக்காப்பாற்றுகின்றன, யாருக்கு பாதகம், என்பதைக் கவனிப்போம்.

### ஸ்டாலின்கிராடும்-இந்தியாவும்

யுத்தத்தில் வெற்றியின் அலை நேசதேசங்களின் சார்பாகத் திரும்பியது எதனால்! ஸ்டாலின்கிராடின் சரித்திர மகத்துவம் பெற்றுள்ள எதிர்ப்பினால் தான் என்பதை யாரும் மறுக்க மாட்டார்கள். இந்தியமக்களுக்கு இதனால் ஏற்பட்ட பலன் என்ன!

முதன் முதலாக ஸ்டாலின்கிராடின் வீர எதிர்ப்பு கொலைகாரப் பிசாசுகளான ஹிட்லரின் சேனையிடமிருந்து இந்திய மக்களைக் காப்பாற்றியுள்ளது. ஸ்டாலினுடைய நகரம் நாஜிகளை வெற்றிகரமாக எதிர்த்து என்றுங் கண்டிராத வகையில் சுற்றி வளைத்திராவிட்டால் என்ன நேர்ந்திருக்கும்! நாஜிகள் காகஸஸிற்குள்ளே உடைத்துக்கொண்டு வந்து, ஈரானில் புகுந்து இந்தியாவுக்குள் பாய்ந்திருப்பார்கள். நமது புனித நாட்டைச் சூறையாடி, நமது பெண்களின் மானத்தைக்குலைத்து, நமது மக்களை அடிமைப்படுகுழியில் ஆழ்த்தியிருப்பார்கள். சொந்த சோவியத் நாட்டைப் பாதுகாப்பதற்காகப் போராடும் செஞ்சேனை வீரர்கள் அதே போராட்டத்தின் மூலம் நமது தாய்த் திருநாட்டை ஹிட்லரீய நரக வாதையிலிருந்து காப்பாற்றியிருக்கிறார்கள்.

இரண்டாவதாக ஸ்டாலின்கிராட் போராட்டத்தால் வட ஆப்பிரிக்காவில் எதிர்த் தாக்குதலை ஐக்கிய நாடுகளால் ஆரம்பிக்க முடிந்தது, ஹிட்லர் எகிப்தைக் கைப்பற்றி அங்கிருந்து ஈரானில் புகுந்து இந்தியாமேல் தாவத் திட்டம் போட்டிருந்தான். அவனது இந்த இரண்டாவது வஞ்சகத் திட்டத்தை இந்த எதிர்த் தாக்குதல் தவிடுபொடியாக்கி விட்டது.

மூன்றாவதாக ஸ்டாலின்கிராடின் வீரப் போர், இந்தியாவின் மேல் பாசிஸ ஆக்கிரமிப்பு மேற்கிலிருந்து மட்டுமல்ல கிழக்குத் திசையிலிருந்தும் கூட ஏற்படாமல் காப்பாற்றியது. ஜப்பான் இன்னும் இந்தியாவைத் தாக்கத் தொடங்கவில்லையென்றால் அதற்குக் காரணம் ஸ்டாலின்கிராட் இன்னும் வீழ்ச்சி யடையாததுதான். ஸ்டாலின்கிராட் ஹிட்லருடைய அட்டவணையை ஆடிக்காற்றிலே பறக்கடித்தது; ஜப்பானின் திட்டங்களையும் சிதறவைத்தது. இந்த இரு பாசிஸ்டுக் கூட்டாளிகளும் இந்தியாவை இருதிசையிலிருந்தும் தாக்கி ஒரு ராட்சஸக் கிடுக்கியில் சிக்க வைக்கலாமெனத் திட்டம் வகுத்திருந்தார்கள். மேற்கிலிருந்து ஹிட்லரின் சேனையும், கிழக்கிலிருந்து ஜப்பானிய சேனையும் இந்தியாவுக்குள் புகுந்து சந்திப்பதாகத் திட்டம் போட்டிருந்தார்கள். ஆனால் ஸ்டாலின்கிராட் விழவில்லை. ஜப்பானியர் பின் தங்கினர். மலேயா மக்களுக்கும் பர்மீய மக்களுக்கும் நேர்ந்த கதி நமக்கும் நேரிடாமல் தப்பினோம்.

ஸ்டாலினுடைய வீரத் தோழர்கள், உலகம் இதுவரை கண்டிராத தீரர்கள். உலகம் இதுவரைப் பார்த்திராத கொடுங்கோலும், அட்டூழியமும், மிருகத்தனமும் மிகுந்த நரகவேதனைக்கொப்பான பாசிஸ அடிமைத்தனத்திற்கு இந்திய மக்கள் இரையாகாமல் இவ்வீரர்கள் காப்பாற்றியிருக்கின்றனர்.

### வெற்றியும் தோல்வியும்

"இதெல்லாம் சரி; எனக்கென்ன பயன்! நான் பிரிட்டிஷாருக்கு அடிமையாக இருந்தேன், இப்போதும் அடிமையாகவே இருக்கிறேன்" என்று வாதிக்கிறார் சோர்வுற்ற வழிதெரியாத தேசபக்தர்.

யாருக்கு வெற்றி! யாருக்குத் தோல்வி! என்பதைச் சற்று கவனிப்போம். நமக்கு என்ன பயன் கிடைத்துள்ளது என்பது விளங்கும். பாசிஸ்டுகளின் உலக ஆதிக்கத் திட்டம் நிறைவேறாமல் போய்விட்டது. அவர்களது ஆக்கிரமிப்புக் காளாகாமல் இந்தியா காப்பாற்றப்பட்டிருக்கிறது. பாசிஸ்டு ஏகாதிபத்திய வாதிகளின் காட்டுமிராண்டிச் சேனைகள் தோல்வியடைகின்றன. சாவும், சர்வநாசமும் விளைவிக்கும் அவர்களது கையிலிருந்து இந்திய மக்கள் தப்பியிருக்கின்றார்கள். ஆகவே இதனால் நமக்குலாபம், இது நமது வெற்றி.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் இன்னும் நமது தலைமேல் ஏறி உட்கார்ந்திருக்கிறார்கள். ஆனால் அவர்கள் அவர்களது உலக சாம்ராஜ்யத்தை—விலைமதிக்க முடியாத காலனியான இந்தியாவை விடாமல் அடிமைநாடாகவே வைத்திருப்பதில் வெற்றியடைந்து வருகிறார்களா! இல்லை. இதற்கு எதிரான நிகழ்ச்சிகளே நேர்ந்து வருகின்றன. அவர்கள் வெற்றிக்கு மேல் வெற்றி காணவில்லை. குழப்பத்துக்கு மேல் குழப்பத்திலிருக்கிறார்கள். உலகம் தங்களுடைய ஆட்சிக்குட்பட்டதாக எண்ணி அவர்களால் இனிமேல் காலந்தள்ள முடியாது. அவர்களுடையசாம்ராஜ்யத்தை உலகமக்களுக்கு இழக்கவேண்டிய நிர்ப்பந்தம் நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டே வருகின்றது.

### இரண்டு கொள்கைகள்

1941 ஜூன் மாதம் ஹிட்லர் சோவியத் நாட்டைத் தாக்கினான். அதுவே உலக ஆதிக்கத்திற்காக அவன் செய்த கடைசி முயற்சி. ஹிட்லர் ஜெயித்தால் உலக முழுவதும் பாசிஸ ஏகாதிபத்தியத்தின் காலடியில் கிடக்கும். சோவியத் எதிர்ப்பு வெற்றியடையுமானால் ஹிட்லரின் திட்டங்கள் தகர்ந்து தொலையும், முற்றிலும் புதிய நிலைமைகள், சந்தர்ப்பங்கள் ஏற்படும். சோவியத்தின் எதிர்ப்பினால் சம அந்தஸ்தான முறையில் ஒவ்வொரு நாட்டு மக்களும் அவரவர்களது சுதந்திரத்தை அடிப்படையாகக் கொண்டு ஒன்றுதிரள வழி ஏற்படுகின்றது. சுருக்கமாகக் கூறினால் ஹிட்லரின் உலக ஆதிக்கச் சூழ்ச்சியை, உலக விடுதலைத் திட்டத்தினால்தான் முறியடிக்க முடியும். சரித்திரம் கிளப்பிய பிரச்சினை இதுவே. எல்லா நாடுகளின் நல உரிமைகளும், எல்லா மக்களின் சுதந்திரமும் இந்த உலக விடுதலைப் போராட்டப்பாதையில்தான் என்று ஏற்பட்டது.

ஆனால் ஏகாதிபத்திய வாதிகளுக்கு இந்தப் பார்வை இல்லை. உலக ஆதிக்கம் அவர்கள் கையிலேயே இருக்கவேண்டும் என்று விரும்பினார்கள். நிலைமையை அவர்கள் எப்படி நிர்ணயித்தார்கள்! "சோவியத் யூனியன், இன்றோ நாளையோ விழுந்துவிடும். அதுவரை கிடைக்கும் சமயத்தை உபயோகப்படுத்திக்கொண்டு வேண்டிய தற்காப்புத் தயாரிப்புகளுடன் இங்கிலாந்தை ஒரு தீவுக் கோட்டையாக மாற்றிக் காப்பாற்றிக்கொள்ளுவோம்" என்று அவ்ர்கள் எண்ணமிட்டார்கள். ஏகாதிபத்தியத்தின் போர்த் திட்டம் என்ன! தாங்கள் பாதுகாப்பளவிலே நின்றுகொண்டு செஞ்சேனையே போராட்டத்தை முழுவதும் ஏற்று நடத்த விடுவது அவர்களது ராணுவ தந்திரம். காலனிகளிலுள்ள மக்களுக்கு சுதந்திரம் கொடாமல் அவர்கள் தலைமேல் அழுந்தி உட்கார்ந்து கிடப்பதுதான் அவர்கள் அநுஷ்டிக்க விரும்பிய அரசியல் தந்திரம்.

கடந்த 19 மாத யுத்தத்திற்குப்பின் யாருடைய நோக்கம் வெற்றிகரமாக முன்னேறி வருகின்றது! பொது ஜனப்போர்த் திட்டமா! ஏகாதிபத்திய வாதிகளின் திட்டமா!

### முதல் தோல்வி

1941-ல் அக்டோபருக்குள் சோவியத் காட்டிய தீர எதிர்ப்பு 'ஹிட்லரைத்தோல்வியடிக்க முடியாது' என்று நிலவிவந்த எண்ணத்திலே மண்ணைப்போட்டது. அவனது மின்னல்தாக்குதல் செல்லாது என்று நிரூபித்தது. வெறும் பாதுகாப்புத் தந்திரத்தின் உதவாக்கரைத் தன்மையை அம்பலத்திலிழுத்தது. சோவியத்தின் மதிப்பு உயர்ந்தது; ஏகாதிபத்தியத்தின் மதிப்புக் குறைந்தது. ஒவ்வொரு நாட்டுமக்களும் அவர்களது அரசாங்கங்களை நெருக்கத் தொடங்கினார்கள். சோவியத் மக்கள் போராடும் முறையில் யுத்தத்தை நடத்த வேண்டுமென்று நிர்ப்பந்தித்தார்கள். பிரிட்டிஷ் அரசாங்க அதிகார பதவிகளிலிருந்த ஹிட்லரின் சிநேகிதர்களான கர்னல் மூர் பிரபஸான், காப்டன் மார்கஸன் முதலியோர் வெளியேற்றப்பட்டனர். பிரிட்டிஷ் மந்திரிசபை திருத்தியமைக்கப்பட்டது. அதோடு மாஸ்கோ மகாநாடு சோவியத் யூனியனோடு பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்கும் உள்ள ஒத்துழைப்பை மேலும் வளர்க்க அடிகோலியது.

### இரண்டாவது தோல்வி

டிசம்பர் 7-ந் தேதிக்குள் மாஸ்கோ வெற்றி பூர்த்தியானது. ஹிட்லருடைய முதல் படையெடுப்புப் படுதோல்வியடைந்தது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் இரண்டாம் போர்முனையைத் துவங்கவில்லை. சோவியத் வெற்றிகள் இன்னுமொரு மாறுதலுக்கு அடிபோட்டன. ஹிட்லர் தோற்கடிக்கப்பட்டான், ஆனால் முறியடிக்கப்படவில்லை. எனவே ஐக்கிய தேசங்களின் மீது மீண்டுமொரு பாய்ச்சலுக்குத் தயார் செய்தான். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பின்னணியான காலனிகளை ஹிட்லர் தனது கீழ்த்திசைக் கூட்டாளியான ஜப்பானைக்கொண்டு தாக்கச் செய்தான். ரோமெல் எகிப்தின்மேல் படையெடுத்தான்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் ஹிட்லருக்கு எதிராக ஓர் இரண்டாம் போர் முனையை ஆரம்பிக்கவில்லை; ஆனால் அதற்குப்பதில் அவர்களுக்கு விரோதமாக ஓர் இரண்டாம் போர்முனையை ஹிட்லர் ஆரம்பித்துவிட்டான்.

தற்காப்புத் தந்திரத்திற்காக அவர்கள் திட்டம் போட்டார்கள். ஆனால் அவர்கள் பேரிலேயே பாய்ந்த பாசிஸ்டுகளின் எதிர்த்தாக்கலைச் சமாளிக்க வேண்டி வந்தது.

காலனிகளின் தலைமேல் அலுங்காமல் உட்கார அவர்கள் விரும்பினார்கள். ஆனால் காலனிகளை பாசிஸ்டுகளுக்கு இழப்பதா அல்லது அடிமைநாட்டு மக்களிடமே விட்டு விடுவதா என்ற பிரச்சினை அவர்கள் முன்னே நின்றது.

அவர்களது ராணுவ தந்திரமும் அரசியல் திட்டமும் தோல்வியுறலாயின. காலத்திற்கேற்ற மூன்று பிரதான சுலோகங்களின் பின்னே மக்களின் சக்தி வளர்ந்து நெருக்க ஆரம்பித்தது:—

1. வெற்றி தரும் எதிர்த்தாக்குதலுக்கான கூட்டு யுத்த சாகஸம்; அதற்கு அஸ்திவாரமான இரண்டாம் போர்முனை.
2. எதிர்த் தாக்குதலுக்கு வேண்டிய சாதனங்களை முட்டாது சப்ளை செய்வதற்காக உற்பத்திப் பெருக்கம்.
3. பரிபூர்ணமாக மக்கள் போராட்டத்தில் முன் வருவதற்காக இந்தியாவுக்கு தேசிய சர்க்கார்; மற்ற காலனிகளுக்கு விடுதலை.

### மூன்றாவது தோல்வி

சோவியத்தின் வஸந்த கால எதிர்த்தாக்குதலின் பின்னே ஏகாதிபத்தியத்தின் கொள்கையைப் பிளந்து கொண்டு பல முற்போக்கான நடவடிக்கைகள் நிகழ்ந்தன.

மே மாதம் ஆங்கிலோ சோவியத் அமெரிக்க ஒப்பந்தம் ஏற்பட்டது. இதனால் ஐக்கிய தேசங்களிடையே ஒத்துழைப்பு வளர்ந்தது. இதுவரையில் மறுக்கப்பட்டு வந்த இரண்டாம் போர் முனையை ஆரம்பிப்பதாக வாக்குறுதி அளிக்கப்பட்டது. ஜூலை மாதத்தில் சோவியத் மக்களிடையே தோன்றிய நியாயமான சந்தேகத்தைத் தீர்ப்பதற்காகவும், பிரிட்டிஷ் மக்களின் கிளர்ச்சியைத் திருப்தி செய்யவும் வேண்டி சர்ச்சிலே ஸ்டாலினிடம் போக நேர்ந்தது.

### நாலாவது தோல்வி

ஹிட்லர் வேனிற்காலத் தாக்குதலுக்குத் தயாராயிருந்தான். ஸ்டாலின், எதிர்ப்பிலிருந்து முடிவுகட்டும் இறுதி எதிர்த்தாக்குதலுக்குத் தயாராயிருந்தார். அந்த சமயத்தில் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வாதிகள் வட ஆப்பிரிக்காவில் தாக்குதலை ஆரம்பித்து அதன்பேரால் ஐரோப்பாவில் இரண்டாம் போர்முனை ஏற்படுத்தவேண்டுவதைத் தட்டிக்கழித்தனர்.

இரண்டாம் போர்முனையைத் தொடங்

(8-ம் பக்கம் பார்க்க)




30-12-42 புதன்கிழமை

# உணவுப்பஞ்சத்தைத் தீருங்கள்

"விலைவாசிக் கட்டுப்பாடு நிறைவேறும்படி நிர்ப்பந்தித்தால் மனச்சோர்வும் கள்ள வியாபாரமும்தான் விளையும். ஒவ்வொருவரும் வாரம் ஒரு பவுண்டு அரிசி குறைத்துச் சாப்பிடும் தியாகமே இன்று நிலைமையைச் சமாளிக்கும் வழி." என்று நெல்லூரில் உணவு நெருக்கடியைப்பற்றி சென்னை அரசாங்க அட்வைஸர் டி. ஜி. ரூதர்போர்டு உபதேசம் செய்தார்.

அரசாங்கம் எடுக்கும் நடவடிக்கைகள் பெயரளவில்தான் என்பதே இந்தப் பேச்சின் அர்த்தம். லாபக் கொள்ளைக்காரர்களை சந்தியிலிழுக்க சக்தியில்லை அல்லது விருப்பமில்லை என்றுதான் நாம் இதிலிருந்து ஊகிக்க முடியும். பொதுமக்களை நம்பவிரும்பாமல் மொத்த வியாபாரிகளுக்குச் சலுகை காட்டும் அதிகாரவர்க்கம்தான் இவ்வாறு பேசமுடியும். விலைவாசிக் கட்டுப்பாட்டினால் மனச்சோர்வடையக்கூடியவர்கள், கள்ள வியாபாரத்தைக் கையாள்பவர்கள், லாபக்கொள்ளை யடிப்பவர்கள்தான், பொதுமக்களல்ல.

வாழ்க்கைக்கு அவசியமான எல்லாப் பொருள்களும் சாதாரணமாய் எல்லோருக்கும் கிடைக்குமாறு விலைவாசி நிர்ணயிப்பு இல்லை. அதிகாரிகள் விலைவாசி நிர்ணயம் செய்கின்றனர்; ஆனால் பொருள் சேமிப்பும் விநியோகமும் மொத்த வியாபாரிகளின் கையில்தான் இருக்கிறது: சர்க்கார் விலைவாசிகளை ஜரூராகக் கட்டுப்படுத்தத் தொடங்கினால், பொருள்களையெல்லாம், அவர்கள் ஒளித்து, ஜனங்களைப் பட்டினி போட்டு விடுகின்றனர். ஆகவே, இன்றைக்குள்ள பிரச்சினை, விலைவாசிக் கட்டுப்பாடு மாத்திரமல்ல, சப்ளைகளையும் சரிவரக் கட்டுப்படுத்துவதே பிரதானப் பிரச்சினையாகும். இதில் சிறிதேனும் அரசாங்கம் கவனம் செலுத்தாமலிருக்கும்போது, சர்க்காரின் விலைவாசி நிர்ணயத்திற்கே மதிப்பில்லாமல் இருப்பதில் என்ன ஆச்சரியம்?

அதிகாரவர்க்கம் இன்றைய நிலைமையின் நெருக்கடியை உணரவில்லை. அநேகருக்கு அரிசி கிடைக்காமலிருக்கும் இன்றைக்கு, அநியாய விலை கொடுக்கமுடியாமல் பட்டினி கிடக்கும் மக்களுக்கு, உபவாசமிருக்கும்படி கூறும் அதிகாரவர்க்கத்தின் போக்கை நாம் என்னென்று சொல்லுவது? வைஸ்ராய் கவுன்ஸில் அங்கத்தினரான என். ஆர். சர்க்கார் தேசிய சர்க்காரின்றி நிலைமையை சமாளிக்க முடியாதென்பதின் அர்த்தமும் இன்றைய அதிகாரவர்க்கத்தினால் ஒன்றும் முடியவில்லை என்பதுதான். உற்பத்தியைப் பெருக்க முடிவதில்லை; உணவை அளிக்க முடிவதில்லை; விலைவாசி நிர்ணயத்தை நிறைவேற்றுவதற்குத் திறமையில்லை. ஆனால் "குறைத்துச் சாப்பிடுங்கள்" என்று கூறுவதற்குத் தயங்குவதில்லை.

பெல்லாரியில் உணவுத் தானியங்கள் கிடையாதென ஜில்லாக் கலெக்டருக்கு முறையீடு; கடப்பை, கர்நூல், அநந்தபூர் ஜில்லாக்களில் துணிக்குப் பஞ்சம்; நெற் களஞ்சியமான தஞ்சை ஜில்லாவிலிருக்கும் நாகப் பட்டணத்தில் அரிசி கிடைப்பது திண்டாட்டமா யிருக்கிறது; பழனியில் ஆறு மாதங்களுக்கு முன் ரூ. 4—8—0 விற்ற வைக்கோல் வண்டிக்கு இன்று ரூ. 18—0—0 கொடுக்கவேண்டி யிருக்கிறது; சேலத்திலும் கோயமுத்தூரிலும் இதர ஜில்லாக்களிலிருந்து அரிசியை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர். தூக்கிப் போடும் விலைவாசிதான் நாம் மாகாணம் முழுவதும் காணும் காட்சி. எங்குபார்த்தாலும் மண்ணெண்ணை எங்கே, தீப்பெட்டி எங்கே, அரிசி எங்கே, சர்க்கரை எங்கே என்ற கேள்விகள்தான்.

இது பொறுக்க முடியாத நிலைமை. அதுவும் சாதாரணகாலம் போலல்ல. ஜப்பானியப் பேய்கள் நாட்டை விழுங்க நெருங்கிவிட்டனர். கல்கத்தாவில் குண்டுவீச்சு தொடர்ச்சியாய் நடந்திருக்கிறது. இலங்கை ராணுவத் தலைவர் இலங்கையின் மீதும் படையெடுப்பு வரலாம் என்று எச்சரிக்கை செய்கிறார். கிழக்குத்திசையில் சுமார் 1000 மைல் கடற்கரை கொண்ட சென்னை மாகாணத்தின் கதி என்ன? பாசிஸ்டுப் படையெடுப்பு கதவைத் தட்டிக்கொண்டிருக்கும் நிலை. நாம்ஒன்றுபட்டு அதை எதிர்க்கவேண்டிய நிலை. அதிகாரவர்க்கமோ தக்க நடவடிக்கை எடுத்து உணவுப் பிரச்சினையை உடனே தீர்க்க முடியாமல் பஞ்சமும் பட்டினியும் மக்களைப் பீடிப்பதைப்பற்றி சர்வ சாதாரணமாய்ப் பேசிக்கொண்டிருக்கிறது. விலைவாசி நிர்ணயத்தை நிறைவேற்றுவதன் கஷ்டங்களை எடுத்துக் கூறி ஓலமிடுகிறது.

தலைவர்கள் சிறைப்படுத்தப்பட்டபின் அன்னியப் படையெடுப்பை எதிர்க்கும் சக்தி பாதி குறைந்துவிட்டதென்று கூறலாம். இப்பொழுது உணவு நெருக்கடியும் சேர்ந்துள்ளதில் பாசிஸப் படையெடுப்புக்குக் கொண்டாட்டம்தான்.

நிலைமையைத் தவிர்க்க உடனடியாகச் செய்யப்பட வேண்டியது என்ன? உணவுப் பொருள்கள் ஜனங்களின் மற்ற தேவைப் பொருள்கள், ஆகியவற்றின் விலைவாசிகள் ஜனங்கள் கொடுத்து வாங்கக் கூடிய அளவிற்கு கட்டுப்படுத்தப்பட வேண்டும்; அதே சமயத்தில், விவசாயிகளுக்கு, நியாயமான விலை கிடைக்குமாறு, விவசாயிகளிடமிருந்து வாங்கும் தானியங்களுக்குக் குறைந்தபக்ஷ விலைகளும் நிர்ணயிக்கப்பட வேண்டும். இரண்டாவதாக, தானியங்களையும், மற்ற பொருள்களையும், வியாபாரிகள், பொது ஜனங்களின் கண்காணிப்பிலுள்ள கிடங்குகளில் வைக்குமாறு நிர்ப்பந்திக்கப்பட வேண்டும். பொருள்கள், மார்க்கெட்டைவிட்டு மாயமாய் மறைவதைத் தவிர்க்க இதுதான் வழி.

இந்த நடவடிக்கைகள் எடுப்பதற்கு அரசாங்கத்திற்கும், வியாபாரிகளுக்கும், பொதுமக்களுக்கும் பரஸ்பர ஒத்துழைப்பு இருந்தாக வேண்டும். நாட்டைக் காக்கும் தேசீய உணர்ச்சியினால் தூண்டப்பட்ட 40 கோடி மக்களின் ஒற்றுமையே உணவுப் பிரச்சினையையும் பாசிஸ்டு படையெடுப்பையும் சமாளிக்க முடியும். தேசீய சர்க்காரின்றி சீர்திருத்தத்தை எதிர்பார்ப்பது பகற்கனவேயாகும்.

ஆனால் தேசீய சர்க்கார் வரும்வரை நாம் பட்டினி கிடந்து சாவதா? ஒருக்காலும் இல்லை. ஒவ்வொரு கிராமத்திலும் ஒவ்வொரு நகரத்திலும் பொதுமக்கள் ஒன்று சேர்ந்து சேமிப்புகளை வெளிப்படுத்தி, நியாயமான விலைக்கு விநியோகிக்க அதிகாரவர்க்கத்தை வற்புறுத்தியாக வேண்டும். லாபக்கொள்ளைக் காரர்களும் லஞ்சம் வாங்குபவர்களும் பொதுமக்களின் துரோகிகள் என்று வெளிப்படுத்தியாக வேண்டும். வியாபாரிகளுக்கும் பொதுமக்களுக்கும் பொருள் விநியோகத்தில் பரஸ்பர ஒத்துழைப்பு இருக்கும்படியான முறையில் எல்லா ஜனப் பகுதிகளும் கொண்ட பொதுஜன உணவுக் கமிட்டிகள் நாடெங்கும் நிறுவப்பட வேண்டும். அதிகாரவர்க்கம் நிலைமையை சமாளிக்க முடியாமல் தட்டிக் கழிக்கலாம். ஆனால் பொதுஜன உணவுக் கமிட்டிகள்—பொதுஜன ஆதரவுடன் முன்வந்து பொருள் விநியோகப் பொறுப்பை சரிவர ஏற்றுக் கொண்டு செலுத்த முடியும். இந்த வழியில் நாம் உணவுப் பிரச்சினையைத் தீர்ப்பது மட்டுமல்ல. பொதுமக்கள் இப்பிரச்சினையின் மூலம் ஒன்றுபட்ட சக்தியாகத் திரளுவதையும் காண்போம். நாடெங்கும் வளரும் இத்தேசீய ஒற்றுமை தேசீய சர்க்காரை நாம் அடையும்படி செய்யும். இந்தியாவில் பஞ்ச நிலை ஒழியும்; பாசிஸம் கால்வைக்க முடியாது.

# குறிப்புகள் (பி. ஆர்.)

## நெருக்கடி குமுறுகிறது

கல்கத்தா மீது விமானத் தாக்குதல் ஆரம்பித்து விட்டது. ஒருமுறையல்ல, ஒரே வாரத்தில், நான்குமுறை நடந்திருக்கின்றது. நாட்டிற்கு, மிகப் பெரிய நெருக்கடி ஏற்பட்டிருக்கும் சமயத்தில் இந்தத் தாக்குதல் ஆரம்பித்திருக்கிறது.

உணவுப்பொருள்கள் கிடைப்பதே முடியாது போய்விட்டது. எல்லா மாகாணங்களையும் விட, வங்காளத்தில், உணவுப் பஞ்சம், மிகவும் கோரமா யிருக்கிறது. கங்கை நதியின் முகத்துவாரத்தில், கங்கை, பிரும்ம புத்திரா நதிகளின் வற்றாத நிர்ப்பாசன வசதிகளைக் கொண்டு, நெற் கதிர்கள் நெல் மணிகளின் சுமையைத் தாங்காமல், வளைந்து நிற்கும் காட்சியைக் கொடுக்கும் இந்தச் செழுமையான மாகாணத்தில், இன்று அரிசி கிடைப்பதில்லை!

இது போதாததற்கு, நிலக்கரிப்பஞ்சம் வேறு. பல தொழிற்சாலைகள், மூடவேண்டிய நிலைமை ஏற்பட்டு விடுமோ என்ற பயம் வங்க சர்க்காருக்கே ஏற்பட்டு விட்டது!

கடைகளின் வாயிலில், ஹனுமார் வால் மாதிரி, ஜனங்கள் ¼ படி அரிசிக்காக, அணிவகுத்து, 4 மணி நேரம் வரையில் காத்து நிற்பது. கடைசியில், 'இன்றைக்கு அரிசி தீர்ந்துவிட்டது' என்று கடைக்காரன் சொல்லக் கேட்டு, வீடு திரும்புவது. இது, இன்று வங்காளத்தில் தினசரி வாழ்க்கைமுறை யாகிவிட்டது.

## வைசிராய்க்குப் பரம திருப்தி!

இந்த கோர நெருக்கடியில்தான், வைசிராய் பிரபுவிற்கு, தன்னுடைய சர்க்கார் எடுத்துக்கொண்டுள்ள நடவடிக்கைகளிலெல்லாம் பரம திருப்தி ஏற்பட்டிருக்கிறது. "கோதுமை கட்டுப்பாடு உத்தரவு, சப்ளை போர்டுகள்.........இவைகளெல்லாம், என்னுடைய அரசாங்கத்திற்கு, இந்த மிக முக்கியமான பிரச்சினையைத் தீர்ப்பதில் உள்ள கவலைக்கு அத்தாட்சிகளாகும்" என்று, கல்கத்தா ஐரோப்பிய வர்த்தக சங்கத்தில் வைசிராய் சென்ற வாரம் பேசியிருக்கிறார். பட்டினியால் வாடும் மக்களுக்கு, வைசிராய், அளிப்பதெல்லாம், அவருடைய சர்க்காரின் கவலை ஒன்றுதான். இந்த ஒரு வாசகத்திலேயே, வைசிராய், தன்னுடைய நிர்வாகத்திறமையின் வண்டவாளத்தை அப்படியே ஏற்றுக்கொள்கிறார்.

## அமெரிக்க தூதுகோஷ்டி கூறியது என்ன?

அமெரிக்க சர்க்காரின் சார்பாக, இங்கு வந்த தொழிற்சாலை நிபுணர்களின் கமிட்டியின் ரிபோர்ட்டை பூராவாகப் பிரசுரம் செய்ய தைரியமில்லாத சர்க்காரின் தலைவராய்விளங்கும் லின்லித்கோ, கிராடி (அமெரிக்க) தூதுகோஷ்டியைப் பற்றி பேசுவது வேடிக்கையாயிருக்கிறது. அந்த ரிபோர்ட்டு பிரசுரிக்கப்பட்டால், லின்லித்கோவின் நிர்வாகத்தின் திறமை, குறிப்பாக, போக்குவரத்து சாதனங்களில் அதற்குள்ள அபாரமான நிர்வாகத்திறமையைப்பற்றி வேறொரு நேசநாட்டு சர்க்கார் என்ன நினைக்கிறது என்பதுதெரியவரும்.

## "குறைந்தபக்ஷ பலாத்காரம்"

மிதுனபுரி, பலியா, சிமூர், ஆகிய இடங்களில் நடந்த சம்பவங்களைப்பற்றி பகிரங்க விசாரணை நடத்த சம்மதியாத வைசிராய், கலவரங்களை அடக்குவதற்காக, "குறைந்த பக்ஷ பலாத்காரம்தான்" உபயோகிக்கப்பட்டதாகக் கூறுகிறார்.

## மக்களுக்கு ஊக்கமூட்டும் நடவடிக்கைகள!

"படையெடுப்பு அபாயத்தை எதிர்ப்பதற்காகவும், ஜனங்களுடைய உணர்ச்சியையும், உறுதியையும் தளராமல் பாதுகாப்பதற்கும், சகல விதமான நிலைமையையும் சமாளிப்பதற்கும்" வெகு மும்முரமான ஏற்பாடுகளையெல்லாம் எடுத்துக் கொண்டு விட்டதாக வீரம் பேசுகிறார் வைசிராய். உணவுப் பஞ்சத்தைத் தீர்க்கவகையின்றி தவிப்பது;—வைசிராயின் நிர்வாகசபையைச் சேர்ந்த அங்கத்தினர் ஒருவர், 'இந்த பிரச்சினையை எங்களால் தீர்க்கமுடியாது, தேசீய சர்க்காரினால்தான் தீர்க்கமுடியும் என்று பச்சையாகக் கூறுவது; சென்னை சர்க்காரின் அங்கத்தினர் ஒருவர் விலைவாசிகளைக் கட்டுப்படுத்தக்கூடாது; ஜனங்கள் குறைவாகச் சாப்பிட வேண்டும் என்று பேசுவது; தேசத்தில் பயங்கர அடக்கு முறையைக் கையாள்வது; இவைகளெல்லாம், ஜனங்களின் உறுதியை பலப்படுத்தும் நடவடிக்கைகள் போலும்!

லின்லித்கோ பிரபுவைக்குறை கூறுவதில் என்னபிரயோஜனம்! தேசத்தின் முன்நிற்கும் பிரச்சினையோ மிகவும் பிரும்மாண்டமானது. ஜனங்கள் பூராவையும் திரட்டும் பிரச்சினை. சோவியத் ரஷ்யாவில், இன்று ஸ்டாலின் எந்த மகத்தான வேலையைச் செய்து வருகிறாரோ, அதில், சிறிதேனும் குறைவானதல்ல இந்திய சர்க்கார் செய்யவேண்டியவேலை. ஆனால், மக்களிடையிலிருந்து தோன்றி, மக்களின் போராட்டங்களை நடத்தி, அதன் மூலம் மக்களின் தலைவனாய்விளங்கும் ஸ்டாலின் நிர்வகித்துவரும் வேலையைப்போன்றமகத்தானவேலையை, ஜனங்களோடு தொடர்பு என்பதையே அறியாத, லின்லித்கோவின் மூளையைக்கொண்டு செய்ய வேண்டுமென்றால் முடியுமா! இதனால்தான் தேசீய சர்க்காரினால்தான் இந்தப் பிரச்சினையைத் தீர்க்கமுடியும் என்று, நளினி ரஞ்ஜன் சர்க்கார் கூறுகிறார்.

## "அகண்ட ஹிந்துஸ்தான்" பிரசாரம்

இதெல்லாவற்றைக் காட்டிலும், இந்தியாவின் "பூகோள ஒற்றுமை"யைப்பற்றி, வைசிராய் சண்டமாருதப் பிரசங்கம் செய்ததுதான் இங்கு விசேஷமாகக் குறிப்பிடவேண்டும். உண்மையில், வைசிராய், இன்று "அகண்ட ஹிந்துஸ்தான்" பிரசாரத்தில் இறங்கியிருக்கிறார். இந்தப்

(7-ம் பக்கம் பார்க்க)

# பிற்போக்குசக்திகளை ஒழிப்பதில் பெண்களுக்கும் பங்குண்டு

"போன் மலையில் ஒரு மாதர் சங்கம் ஆரம்பிக்க ஏற்பாடாயிருக்கிறது. பெண்களுக்கு இங்கு எவ்வளவோ குறைகள் இருக்கின்றன. அவற்றை ஒன்றுபட்ட முறையில் நின்று நீக்கிக் கொள்ளலாம் என்று பெண்கள் உணருகின்றனர். மேலும் பாசிஸ்டுஆக்கிரமிப்பை உத்தேசித்து இன்றுள்ள நெருக்கடியைத் தவிர்க்க தேசீய ஒற்றுமை மூலம் தேசிய சர்க்கார் பெற வேண்டிய அவசியத்தை அநேக பெண்கள் இப்பொழுதுதான் தெரிந்து கொள்ளுகின்றனர். இவர்களுக்கு அரசியல் பயிற்சி பெற ஆர்வம் அதிகரித்து வருகிறது. ஜப்பானிய ஆக்கிரமிப்பு வந்துவிட்டால் தாங்கள் நடந்துகொள்ள வேண்டிய முறைகள் என்னஎன்று கேட்கின்றனர். தற்காப்புப் பயிற்சி பெற விரும்புகின்றனர்.

பெண்கள் முன்னேற்றத்தில் கம்யூனிஸ்ட் கட்சி அக்கரை கொண்டுள்ளதை இங்குள்ள பெண்கள் வரவேற்கின்றனர். சிலர் நமது "ஜனசக்தி" வாசிக்கின்றனர்; ஓன்றிரண்டு பேர் "பீப்பில்ஸ் வார்" படிக்கின்றனர். இவர்களுக்குள்ள தேசீய உணர்ச்சியும் தேச சேவா ஆர்வமும் அசாத்தியமாயிருக்கிறது. சங்க மூலம் தங்களுடைய ஒற்றுமையையும் அரசியல் பயிற்சியையும் பெருக்கி நாட்டிற்குத் தொண்டாற்ற முடியும் என்பதை ஏற்றுக் கொள்ளுகின்றனர். சுமார் 50 பெண்கள் சேவைசெய்ய முன் வந்துள்ளனர். 14-12-42 ல் மழை பெய்தும் ஒரு கூட்டம் நடந்தது. அதிலே ஒரு கமிட்டி அமைக்கப்பட்டுள்ளது" என்று நமக்குப் பொன்மலையிலிருந்து வந்த ரிப்போர்ட்டு கூறுகிறது.

பொன் மலையில் ஆரம்பிக்கப்படும் மாதர் சங்கம், அரசியல் ஆர்வத்துடன், பெண்களின் குறைகளை நீக்கவும், பெண்களுக்கும் பயிற்சியளிக்கவும் தொடர்ச்சியாக வேலை செய்யுமானால் தமிழ்நாட்டில் உறங்கிக் கிடக்கும் பெண்கள் இயக்கத்திற்குப் புத்துயிர் கொடுத்து வழிகாட்டும் என்று கூறலாம். இந்த விஷயத்தில் பொன்மலைத் தோழர்கள் மட்டுமல்ல தமிழ்நாட்டிலுள்ள அனைவரும், ஆந்திர மாகாணத்திலும் கேரளத்திலும் பெண்கள் இயக்கம் கட்சித் தொடர்புடன் எப்படிப் பெருகி வருகின்றது என்பதை சற்று கவனித்தால் போதும்,

## ஆந்திர மாகாணத்தில்

ஆந்திர மாகாணத்தில் பெண்கள் முன்னேறி வருவதைப் பார்த்தால் பெண்களால் சாதிக்க முடியாதது என்ன என்ற உறுதி ஏற்பட்டு விடுகிறது. ஆந்திர நாட்டில் பெரிய பட்டணங்கள் கிடையாது. பெரும்பாலும் கிராம வாழ்க்கை தான். பெண் கல்வி என்பது மருந்துக்குக் கூடக் கிடைக்காமலிருந்த இடம். பெண்களை அடிமைப்படுத்தி வைக்கும் சமூகப்பழக்க வழக்கங்கள் தமிழ் நாட்டைப் போலத்தான். இவற்றை நீக்க இங்குமங்கும் சில "சீர்திருத்தக் காரர்கள்" கிளம்பினர். ஆனால் தொடர்ச்சியாக ஒன்றும் நடைபெறவில்லை. மாதர் சங்கங்களெல்லாம் டவுனிலுள்ள படித்த "பெரிய மனிதர்" வீட்டுப் பெண்களுக்குத்தான். இத்தகைய நிலைமையில் கட்சி, பெண்கள் இயக்கத்திலும் அக்கரை கொள்ள ஆரம்பித்தது.

1937-38ல் கட்சி நடத்திய அரசியல் பள்ளிக்கூடங்களில் கட்சித் தோழர்களின் மனைவிமார், சகோதரிகள், சிலருக்கு அரசியல் பயிற்சி அளிக்கப்பட்டது. இந்தத் தோழர்கள்தான் இப்பொழுது ஆந்திர மாகாணத்தில் மாதர் இயக்கத்தின் முன்னணியில் நின்று வேலை செய்கின்றனர். கிருஷ்ணா ஜில்லாவில் மட்டும் 100 கிராமங்களில் மாதர் சங்கங்கள் இருக்கின்றன. அரசியல் நிகழ்ச்சிகளையும் தேசீய தினங்களையும் ஒட்டிக் கூட்டங்களும் ஊர்வலங்களும் உண்டு. பொதுஜன யுத்தத்தை ஆதரித்து, இந்த யுத்த மூலம் நமக்கு விடுதலை எவ்வாறு உள்ளது என்பதைப் பற்றியும் இதற்கென தேசீய சர்க்காரின் அவசியத்தைப் பற்றியும் பிரசாரம் செய்து வருகின்றனர்.

## பொதுஜன முன்னணியில்

இந்த மாதர் சங்கங்கள் செய்யும் தினசரி வேலை என்ன? ஒன்றுபட்டுக்கிளர்ச்சி செய்து ஒவ்வொரு கிராமத்திலும் தகுந்த பிரசவ கால உதவி பெற்றிருக்கின்றனர், ஸ்திரீகளுக் கெனப் பிரத்தியேகமாகக் கிராமங்களில் கக்கூஸ்கள் கட்டப்பட்டுள்ளன. 15 முக்கிய கிராமங்களில் மாதர்களுக்கு வாசக சாலைகள் ஏற்படுத்தப்பட்டு இவற்றில், பத்திரிகைகள் முற்போக்குப் பிரசுரங்கள் படிக்கப்பட்டு வருகின்றன.

பால்யவிவாஹம், வரதட்சணை போன்ற பிற்போக்கான சமூகப் பழக்கங்களையும் காலரா, வைசூரிபோன்ற வியாதிகளைப் பற்றிய மூட நம்பிக்கைகளையும் அகற்றுவதற்குப் பிரசாரம் நடைபெறுகிறது. விதவாவிவாகம், விவாக ரத்துரிமை, பெண்களுக்கு சொத்துரிமை இவற்றை ஆதரித்து 1000 வேண்டுகோள்கள் அச்சிடப்பட்டு 150 கிராமங்களில் கையெழுத்துக்கள் வாங்கப்படுகின்றன.

இது மட்டுமல்ல. அரசியல் தினங்கள், ஆர்ப்பாட்டங்களில் பெண்கள் ஆர்வத்துடன் பங்கெடுத்துக்கொள்ள முன்வந்தனர். தோழர் கே. பி. ஆர். கோபாலன் மரணதண்டனை ரத்துக்காக நடந்தகிளர்ச்சியில் முக்கிய பங்கெடுத்துக்கொண்டுள்ளனர். கய்யூர் தோழர்களின் சார்பாக இடைவிடாமல் கிளர்ச்சி செய்து வருகின்றனர். ஒன்றுபட்ட பொதுஜனக்கிளர்ச்சியின் மூலம் எந்த உரிமைகளையும் பெற முடியும் என்ற நம்பிக்கையும் உறுதியும் இப்பெண்களுக்கு ஏற்பட்டுள்ளது. ஜில்லாவிலுள்ள பெண்களனைவரும் சங்கத்தில் சேரவிரும்புகின்றனர். பாசிஸ்டு ஆக்கிரமிப்பு அபாயத்தை உத்தேசித்து தற்காப்புப் பயிற்சிபெற அக்கரைகொண்டுள்ளனர்.

## அரசியல் பயிற்சி

பெண் தோழர்களுக்குப் பயிற்சி அளிக்க, கிருஷ்ணா ஜில்லா மாதர் சங்கம் சமீபத்தில், 15 தினங்களுக்கு ஒரு பள்ளிக்கூடம் நடத்தியது. தேகப்பயிற்சி, சைக்கில் விடுவது, மருத்துவம், சிசுக்கள் பராமரிப்பு, முதல் வைத்திய உதவி, அரசியல் பயிற்சி, தெருக்களில் பாடல் கோஷ்டிகள் நடத்துவது,—இவை போன்றவை கற்பிக்கப்பட்டன. முக்கியமான அரசியல் பிரச்சினைகளும் பள்ளிக்கூடத்தில் நன்கு அலசி விவாதிக்கப்பட்டன. பயிற்சி பெற்றவர்கள் கிராமங்களில் உழைக்கச் சென்றிருக்கின்றனர்.

கட்சியின் ஆந்திர மாகாணக் கமிட்டி பெண்களின் பயிற்சிக்காக இரண்டு பள்ளிக்கூடங்களைத் நடத்துவதாகத் திட்டம் வகுத்துள்ளது. முதல் பள்ளிக்கூடத்தில் சிறிது பொருளாதார சௌகரியமுள்ள பெண்களுக்கு, அரசியல் வேலையிலீடுபடுவதற்கானபயிற்சி 1 மாதத்திற்குள் அளிக்கப்படும். இரண்டாவது பள்ளிக்கூடத்தில் நர்ஸ்வேலை, தையல்வேலை போன்ற தொழிற் பயிற்சியும் அரசியல் பயிற்சியுடன் 3 மாதங்களுக்குள் சுமார் 20 பெண்களுக்கு அளிக்கப்படும். இரண்டு பள்ளிக்கூடங்களும் தொடர்ச்சியாக நடக்கும். ஆந்திர சமூகத்தின் வாழ்வையே முன்னேற்றப்பாதையில் இழுத்துச் செல்லும் ஆர்வத்துடனும் பயிற்சியுடனும் பெண்கள் பள்ளிக்கூடங்களிலிருந்து வெளிக்கிளம்புவார்கள் என்ற உறுதி ஏற்பட்டிருக்கிறது.

## கேரளத்தில்

கேரளத்தில் பெண்களின் அரசியல் முன்னேற்றமும் வளர்ச்சியும் இன்னும் போற்றத்தக்கது. பெண் கல்வியில் இந்தியாவில் முதன்மை ஸ்தானம் வகிக்கும் கேரளத்தில் மாதர் இயக்கம் படித்த கோஷ்டிகளுடனிருக்கும்வரை தேக்கப்பட்டு நின்றது. 1930–32 சட்ட மறுப்பு இயக்கத்தில் சம்பந்தப்பட்ட பெண்களில் சுமார் 50 பேரைத் தவிர இதரர்கள் மீண்டும் அரசியல் ஆர்வமற்றுப் பின்னணிக்குச் சென்றுவிட்டனர்.

கிஸான் இயக்கம் பெருத்த பொதுஜன இயக்கமாகவளர ஆரம்பித்தவுடன் பெண்கள் இயக்கமும் புத்துயிர்கொண்டு எழுந்தது. ஆயிரக்கணக்கில் விவசாயப் பெண்கள் இயக்கத்தில் கலந்துகொண்டனர். வாழ்க்கை வசதிகளுக்காகக் கம்யூனிஸ்ட் தலைமையில் நடந்த தொழிலாளர் விவசாயப் போராட்டங்களில் அநேக பெண்கள் வீரத்துடன் பங்கெடுத்துக்கொண்டனர்.

## கட்சி ஆர்வம்

1940–42 இலிருந்துதான் மாதர் இயக்கம் கேரளத்தில் பிரமாதமான வளர்ச்சியை அடைந்ததென்று கூறவேண்டும். கம்யூனிஸ்ட் கட்சி சட்டவிரோதமாயிருந்த காலம். சுமார் 100 முக்கிய தோழர்கள் தலைமறைவாயிருந்து வேலை செய்யவேண்டியிருந்தது. இவர்களைக் காப்பாற்றியது விவசாயக் குடும்பங்களே. இந்தக் காலத்தில்சுமார் 1000 குடும்பங்களிலிருந்து 5000 பெண்கள் வரை கட்சித் தொடர்பு கிடைத்து கட்சியை ஆதரிக்கக் கிளம்பியுள்ளனர். இந்த வீரப்பெண்கள் ஏகாதிபத்தியத்தையும் பாசிஸப்பிற்போக்கையும் ஒழிக்க எத்தகைய தியாகத்திற்கும் தயாராயுள்ளவர்கள். சோவியத் பெண்கள், சீனப் பெண்களுடன் போட்டியிடும் முறையில் கட்சித் திட்டத்தை நிறைவேற்றிவைக்கும் ஆர்வமுள்ளவர்கள்.

ஜப்பானிய ஆக்கிரமிப்பு அபாயம் பெண்களின் அரசியல் உணர்ச்சியையும், பொதுஜன இயக்க வேகத்தையும் இன்னும் பலப்படுத்தியிருக்கிறது. ஜப்பான் வந்தால் ஒரு கை பார்ப்பேன் என்ற உறுதியை இந்த ஒவ்வொரு பெண்ணிடமும் காணலாம். தற்காப்புப் பயிற்சிப் பெற ஆர்வம் அதிகம். 300–400 பெண்கள் கொண்ட ஊர்வலங்கள் உணர்ச்சியூட்டும் விடுதலைப் பாடல்களுடன் செல்லுவது மக்களுக்கு அசாத்திய உணர்ச்சியையும் தைரியத்தையும் அளிக்கிறது. கொச்சியில் அம்பல்லூர் என்னும் ஊரில் பெண்கள் 15 தேச பக்தப் பிரசாரக் கோஷ்டிகளாகச் சென்று கட்சிப் பத்திரிகையை விற்று வருகின்றனர்.

தேசீய முன்னணியில் பெண்கள் முன்னேறி வந்து நாட்டைக்காக்கும் வேலையில் மகத்தான சக்திகளாக விளங்குவதற்குக் கேரள சகோதரிகள் ஆந்திர சகோதரிகள் காட்டும் வழியை நமது தமிழ்நாட்டுப் பெண்மணிகளும் பின்பற்றுவார்களாக.

—எம். ஆர்.

---

# தொழிற்சங்க காங்கிரஸை பலப்படுத்துக

[டி. ஆர். கணேசன்]

மாகாணத் தொழிற்சங்க காங்கிரஸ் மீண்டும் வேலைசெய்யத் தொடங்கி ஒரு மாதகாலமாக, மும்முரமாக வேலை நடந்து வருகிறது. இந்த ஒரு மாதத்தில் பல முக்கிய விஷயங்கள் இந்த காங்கிரஸின் மூலமாக கவனிக்கப்பட்டுள்ளன. முதலாவதாக முக்கூட்டு மகாநாட்டிற்கு நம் சார்பாகச் சென்ற தோழர் என்.எம்.ஜோஷிக்கும், தோழர் பங்கிம் முகர்ஜிக்கும், நமது மாகாண காங்கிரஸ் சில ஆலோசனைகளை அனுப்பித்தது. பஞ்சப்படி விஷயத்தில் ஒரு அடிப்படையான கொள்கையை அரசாங்கம் அனுஷ்டிக்க வேண்டும், லாபத்தில் பாதியை தொழிலாளிகளுக்கு போனஸாகத் தரவேண்டும், விமானப் படையெடுப்பிலிருந்து போதுமான பாதுகாப்புகள் தொழிற்சாலைகளில் ஏற்படுத்தப்பட வேண்டும், என்ற முக்கியமான ஆலோசனைகளை அனுப்பிவைத்தது.

அடுத்தபடியாக நம் மாகாணத்திலுள்ள தொழிற் சங்கங்களை யெல்லாம் ஒன்று பிணைத்து, மும்முரமாக வேலை செய்ய வேண்டிய அவசியத்தை உணர்ந்து, பல சங்கங்களுக்கும் தொழிற் சங்க காங்கிரஸ் ஒரு வேண்கோள் விடுத்திருக்கிறது. தேசத்திற்கும், தொழிலாளி வர்க்கத்திற்கும் நெருக்கடியான இன்றைய நிலைமையில், தொழிலாளிகளின் உயிர் நிலையான சங்கங்களை நாம்நன்கு பலப்படுத்தவேண்டும்; தொழிலாள வர்க்கத்தின் பொறுப்பு இன்றுமிக அதிகரித்துள்ளது; அவைகளை சரிவர நிறைவேற்ற தொழிலாளர்களின் நலன்களைப் பாதுகாத்து, உற்பத்தியைப் பெருக்க முற்பட வேண்டும்; யுத்தம் என்ற பெயரால் முதலாளிகள் தொழிலாளர்களின் உரிமைகளை அலட்சியம் செய்து, லாபக் கொள்ளையையே கருத்தாக வைத்துக் கொண்டு, பல அட்டகாசங்கள் செய்து வருகின்றனர்; அரசாங்கமும் தொழிலாளிகளை நிரந்தரமாக பாதிக்கக் கூடிய ஒரு தொழில் தகராறு சட்டத்தை, சட்டசபைகள் நடக்காத இன்று, நிறைவேற்ற முற்பட்டுள்ளது. இவைகளையெல்லாம் வெற்றிகரமாகத் தாண்டி, நம் உரிமைகளை பாது காப்பதோடல்லாமல், நமது இன்றைய மகத்தான பொறுப்பையும், பெருமை தரத்தக்க முறையில் நிறைவேற்ற வேண்டும்; ஆகையால் சங்கங்கள் யாவும் ஒன்று பிணைந்து வேலைசெய்ய முற்பட வேண்டும்; அகில இந்திய தொழிற் சங்க காங்கிரஸையும், மாகாண காங்கிரஸையும் பலப்படுத்தி. நமது கடமையை செய்யவேண்டும்—என்று கோருகிறது இந்த வேண்டுகோள்.

## மசோதாவிலுள்ள குறைகள்

அடுத்தபடியாக மாகாண காங்கிரஸ் சென்னை தொழில் தகராறு மசோதாவிற்கு தனது அடிப்படையான ஆட்சேபனைகளையும், திருத்தங்களையும் சமர்ப்பித்திருக்கிறது. ஆட்சேபனைகள்: 1) சட்டசபை இல்லாத இந்த சமயத்தில், இம்மாதிரி பல லக்ஷம்தொழிலாளிகளை நிரந்தரமாகபாதிக்கக்கூடியதொருசட்டத்தைஅட்வைஸர்கள் நிறைவேற்றுவது சரியல்ல.-2) கட்டாய மத்தியஸ்தத்தின் மூலம், பல தியாகங்களுக்குப் பிறகு தொழிலாள வர்க்கம் அடைந்துள்ள வேலைநிறுத்த உரிமை பறிமுதல் செய்யப்படுகிறது.-3) நிர்வாக உத்தியோகஸ்தராகிய ஒருவருக்கு (லேபர் கமிஷனருக்கு) ஒருவேலை நிறுத்தம் சட்டரீதியானதா அல்லவா என்று தீர்ப்புக் கூறும் அதிகாரம் கொடுக்கப் பட்டிருக்கிறது. இது மிகஅபாயகரமான பகுதியாகும். மாகாண காங்கிரஸ் சமர்ப்பித்துள்ள முக்கியமான திருத்தங்கள் கீழ்வருமாறு:-

1. 100க்கு 10 தொழிலாளர்களை அங்கத்தினர்களாகவுள்ள சங்கங்களை அங்கீகரிக்கும்படி முதலாளியை கட்டுப்படுத்த வேண்டும்.

2. அரசாங்கத்தின் சமரச முயற்சிக்கு 15நாள் தான் கெடு கொடுக்கப்பட வேண்டும்.

3. கட்டாய மத்தியஸ்தம் கூடவே கூடாது. தொழிலாளிகள் சம்மதித்தால் தான் மத்தியஸ்தம் செய்யப்படவேண்டும்.

4. வேலை நிறுத்தம் சட்டரீதியானதா அல்லவா என்று நிர்ணயிக்கும் உரிமை லேபர் கமிஷனருக்கு இருக்கக்கூடாது.

மாகாணக் காங்கிரஸ் சேலம் ராஜேந்திரா மில் நெருக்கடி போன்ற பிரச்சினைகளிலும் தொழிலாளர்களின் சார்பாகக் கிளர்ச்சி செய்து வருகின்றது; ஜனவரி மாதம் மாகாணக் கன்வென்ஷன் (மகாநாடு) கூட்டம் நடத்துவதற்கு முயற்சிகள் நடைபெற்று வருகின்றன. தொழிற் சங்கங்களெல்லாம் பங்கெடுத்துக்கொண்டு தொழிற்சங்க இயக்கத்தை தமிழ்நாட்டில் ஸ்தாபனபலம் பெற்றதாகச் செய்ய வேண்டும்,

## பொதுக் கூட்டம்

22-12-42 மாலை சென்னை கான்ரான்ஸ்மித் நகர மைதானத்தில் மாகாணத் தொழிற்சங்க காங்கிரஸ் ஆதரவில் தொழில் தகராறுமசோதா கிளர்ச்சி தினம் கொண்டாடப்பட்டது. சென்னை டிராம்வே மின்சாரத் தொழிலாளர்களும், பின்னி பீச் என்ஜினீரிங் தொழிலாளர்களும் "வேலை நிறுத்த உரிமையை பறிமுதல் செய்யவிடோம்" "தொழில் தகராறு மசோதா திருத்தப்படவேண்டும்" என்ற கோஷங்களுடன் ஊர்வலமாக வந்து, கூட்டத்தில் கலந்து கொண்டனர். மாகாணகாங்கிரஸின் தலைவரான தோழர் சக்கரை செட்டியார் தலைமை வகித்தார். "சென்னை தொழில் தகராறு மசோதா தொழிலாளிகளின் வேலை நிறுத்த உரிமையைப் பறிமுதல் செய்ய முற்படுவதோடு, அவர்களின் நலன்களை அடியோடு பாதிக்கிறது; மாகாண காங்கிரஸ் சமர்பித்துள்ள அடிப்படையான திருத்தங்களை அரசாங்கம் அப்படியே ஒப்புக்கொள்ளவேண்டும் என்று இக்கூட்டம் வற்புறுத்துகின்றது, என்ற தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது.

சேலம், ராஜேந்திர மில் விவகாரத்தில் அரசாங்கம் அசட்டையாக இருப்பதைக் கண்டித்தும், உடனே அரசாங்கம் தலையிட்டு முதலாளிகளைக்கட்டுப்படுத்தவேண்டும் என்றும் மற்றொரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

தென்னிந்திய ரயில்வே தொழிற் சங்கத்தின் மாஜி காரியதரிசி தோழர் கல்யாணசுந்திரத்தை உடனே விடுதலை செய்யவேண்டும் என்ற ஒரு தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது.

---

# ஒற்றுமைப்படுத்தும் உணவுப் பிரச்சினை

## தஞ்சை

தாராசுரம் கடைத் தெருவில் ஒரே கூட்டம். ஒரு சிலர்கையில் பழைய தகரம். மற்றும்சிலர்கையில் சீசாக்கள். ஒருவரோடொருவர் மோதிக்கொண்டு முன் செல்லச் சண்டை. சீசாக்கள் உடைதல். சிறு குழந்தைகளின் சப்தம். கால்புட்டி மண்ணெண்ணெய்க்குத்தான் இந்தக் களேபரம்.

தாராசுரம் சுமார் ஆயிரம் குடிகளை உடைய கிராமம். பெரும் பகுதியார் விவசாயிகள்; சிலர் பட்டு நூல் நெசவாளர்; பலர் அன்றாடக் கூலி பெறுபவர்கள். மண்ணெண்ணெய்க்கு அடித்துக் கொள்ளும் கஷ்டம் இங்குநின்றபாடில்லை. இந்த நிலைமையில் நமது தோழர்கள் ஒரு வழி காட்டினார்கள்.

பதினைந்து நபர்களைக் கொண்ட பொதுஜன விநியோகக் கமிட்டி யொன்று ஏற்படுத்தப்பட்டது. இந்தக் கமிட்டியாரின் கூப்பன்படி எண்ணெய் கொடுக்க மண்ணெண்ணெய் வியாபாரிகள் சம்மதிக்கும்படி செய்யப்பட்டது. இப்பொழுது சீசாக்கள் உடையாமல் ஏற்பாட்டுடன் தேவையானவர்களுக்கு எண்ணெய் கிடைக்கிறது. 910 வீட்டுக்காரர்களிடம் மண்ணெண்ணெய் மகஜரில் கையெழுத்துவாங்கும்போது அந்த மகஜரினால் ஏற்படும் அரசியல் ஒற்றுமை அம்சத்தை எடுத்துச் சொல்லியபின் ஒவ்வொரு வீட்டாரும் கையெழுத்துச் செய்தார்கள். அவர்கள் எதிர்பார்த்த எண்ணெய் கிடைப்பதையும் இன்று காண்கிறார்கள். பொது ஜன சக்தியை நிரூபிக்கும் இதே ஒற்றுமைதான் தேசியத் தலைவர்களை சிறையிலிருந்து மீட்பதிலும் தேசிய சர்க்காரைப் பெறுவதிலும் ஆக்கிரமிப்பைத் தடுப்பதிலும் உறுதியான மக்களின் வெற்றியை அளிக்கும் என்று உணர்கிறார்கள்.

### ஒன்றுபட்ட கிளர்ச்சியே வழி

நாகை ஸ்டீல் ரோலிங் மில்லில் 400 தொழிலாளிகள் வேலை செய்து வருகின்றனர். ஆறணாவிலிருந்து பன்னிரண்டணா வரை தினசரிக் கூலி விகிதம். மாதத்தில் பன்னிரெண்டு நாட்கள் தான் வேலை கிடைக்கிறது. தலைக்கு சராசரி மாதாந்திர ஊதியம் சுமார் ரூ.4–8–0. குடும்ப சவரட்சணை அதோ கதிதான்.

துறைமுக வேலை, பண்டகசாலை, கடைத் தெரு முதலிய இடங்களில் கூலி வேலை செய்பவர்கள் சுமார் ஆயிரம் பேருக்கதிகமாக இருக்கின்றனர். சென்ற ஆறுமாத காலமாக கப்பல் போக்குவரத்துச் சரியாக இல்லாத காரணத்தால், ஒரு நாளைக்கு ஒரு வேளை அரை வயிற்றுக் கஞ்சிக்குக் கூட வழியில்லாமல் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். மோட்டார் பஸ்களில் சுமார் 100 பேர் வேலை செய்து வருகின்றனர். இவர்களுக்குக் கிடைக்கும் ஊதியமும் குடும்பக் காலட்சேபத்திற்குப் போதாமல் தவிக்க வேண்டியிருக்கிறது.

சாதாரண வாழ்க்கைக்கு அத்தியாவசியமான அரிசி, உப்பு, புளி, தீப்பெட்டி, விறகு, துணி முதலிய எல்லாப் பொருள்களின் விலையும் நாளுக்குநாள் விஷம்போல் ஏறிக் கொண்டே போகிறது. சர்க்கார் இது சம்பந்தமாக எடுத்துக் கொண்ட நடவடிக்கைகள் ஏழைகளுக்கு எததகைய பலனையும் அளிக்கவில்லை. யுத்தத்தைப் பயன்படுத்திக் கொண்டு கொள்ளை லாப மடிக்கும் மொத்த வியாபாரிகளிடமிருந்து கையிருப்புச் சரக்குகள் நியாயமான விலைக்குப் பொதுஜன விநியோகத்திற்கு சில்லரை வியாபாரிகளுக்குக் கிடைப்பதில்லை. இரண்டொரு இடங்களில் குறிப்பிட்ட நேரத்தில் அதிகாரிகள் அரிசி மட்டும் விநியோகிக்க ஏற்பாடு செய்திருப்பதும் சரிவர நடப்பதில்லை. அங்கு கூடியிருக்கும் எல்லோருக்கும் அரிசி கட்டாயமாகக் கிடைக்குமென்று நிச்சயமில்லை. பலர் அரிசி கிடைக்காமல் வெறுங்கையோடு திரும்புவது சர்வ சகஜமாயிருக்கிறது. விநியோகிக்கும் சிப்பந்திகளின் தர்பாரோ சொல்லி முடியாது. நாகைத் தொழிலாளிகள் பாடு நரக வேதனையாகி விட்டது.

இத்தகைய நிலைமையில் ஒன்றுபட்டுக் கிளர்ச்சி செய்து உணவைப் பெறுவது என நாகை ஜனங்கள் முடிவு கட்டியிருக்கிறார்கள். ஸ்டீல் ரோலிங் மில்லிலிருந்து 285 கையெழுத்துக்கள் கொண்ட ஒரு மகஜரும், மோட்டார் தொழிலாளிகளிடமிருந்து 120 கையெழுத்துக்கள் கொண்ட ஒரு மகஜரும் 14வது வார்ட் 320 பொது மக்களின் கையெழுத்துக் கொண்ட ஒரு மகஜரும் சப் கலெக்டருக்கு அனுப்பப்பட்டிருக்கின்றன. சர்க்கார் டிபோக்கள் திறந்து ரூபாய்க்கு எட்டுப்படி அரிசி கொடுக்கவேண்டுமென்ற கோரிக்கை அரசாங்கத்திற்கு இந்த மகஜர்கள்மூலம் அனுப்பப்பட்டிருக்கிறது.

## மதுரை

### உணவுக்காக ஒற்றுமை

மதுரை நகரில் எல்லாக் கட்சிகளையும் கொண்ட (காங்கிரஸ்-முஸ்லீம் லீக்—ஹிந்து மகாசபை-கம்யூனிஸ்டுக் கட்சி-இதரர்கள்) ஒரு கூட்டம் உணவு நெருக்கடியைத் தீர்ப்பதற்காக 22-12-42ந் தேதி நடந்தது. உணவுப் பொருள்களின் விலைகளைக் கட்டுப்படுத்துமாறும் மண்ணெண்ணெய் ஒழுங்காக மக்களுக்குக் கிடைக்குமாறும் வியாபாரிகள் சரக்குகளைச் சேமித்து வைப்பதைத் தடுக்குமாறும் கலெக்டரிடம் எல்லாக் கட்சிகளும் கொண்ட பொது ஜனக் கமிட்டி தூது கோஷ்டியாகச் சென்று அரசாங்கத்தை வற்புறுத்துவதெனத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இத்தகைய பரஸ்பர நட்புடன் பல மாறுபட்ட கொள்கைகளையும் அரசியல் திட்டங்களையும் கொண்ட கட்சித் தலைவர்கள் ஒன்றுகூடி விவாதித்தது மதுரை நகரில் இதுவரை நடக்காத சம்பவமாகும். இன்றுள்ள நிலைமையில் உணவுப் பிரச்சினையைத் தீர்க்க எல்லா இந்திய மக்களும் ஒன்றுபட்டே ஆக வேண்டும்; ஒன்றுபடுவது சாத்தியம் என்பதையே இது நிரூபித்தது.

23-12-42ந் தேதி காலை ஜில்லா கலெக்டரை நகரப் பொதுஜனக் கமிட்டியின் சார்பாகக் கீழ்க்கண்டவர்களைக் கொண்ட ஒரு தூதுகோஷ்டி சந்தித்தது.

ஜனாப் ஹாஜி முகமது மௌலானா சாகிப் (காங்கிரஸ்) ஜனாப் ஏ. பாட்சா ஜான் (ஜில்லா முஸ்லீம் லீக் காரியதரிசி) ஜனாப் பி. எஸ். உஸ்மான் பி.ஏ. பி,எல்., (நகர முஸ்லீம் லீக் தலைவர்) ஸ்ரீமான் சதுரகிரித் தேவர் (நகர ஹிந்து மகா சபைத் தலைவர்) ஏ. செல்லையா (கம்யூனிஸ்டு) டாக்டர் சுப்பிரமணியம்.

மகசூல், தான் எதிர்பார்க்குமளவிற்கு அனுகூலமாயிரா விட்டால் விலைகளை நிர்ணயிப்பதாகவும் கள்ளத்தனமாக வியாபாரம் நடைபெற்றால் நடவடிக்கை எடுப்பதாகவும், கோதுமைக் கமிட்டி மூலம் நேரடியாகப் பஞ்சாபிலிருந்து கோதுமை வாங்கி மார்க்கெட்டில் சீக்கிரம் கிடைக்கும்படி செய்வதாகவும் மண்ணெண்ணெய் விநியோகத்தையும் திருப்திகரமாய்த் தீர்க்கப் போவதாகவும் கலெக்டர் கூறியதாகத் தெரிகிறது.

இந்தப் பொதுஜனக் கமிட்டிமூலம் ஏற்பட்ட அனுபவத்திலிருந்து நமது கட்சியின் ஒற்றுமை இயக்கத்தின் சக்தியையும் அது நாளுக்குநாள் வளர்ந்து வருவதையும் நடைமுறையில் தெளிவாக உணருகிறோம். ஆனால் இது மட்டும் போதாது. இந்தப் பொது ஜனக் கமிட்டியே பொருள் விநியோகத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும். வார்டு வார்டாகப் பொது மக்கள் இதற்காகத் திரட்டப்பட வேண்டும், பொதுஜன நிர்ப்பந்தமூலம் அதிகார வர்க்கம் பொதுஜனக் கமிட்டிக்கே பொருள் விநியோகத்தை ஒப்படைக்கும்படி செய்தால்தான் நிலைமையைத் தவிர்க்கமுடியும்.

## சேலம்

### அரிசி கிடைத்தது

காவேரிப்பட்டினத்தில் சனிக்கிழமை சந்தை. சந்தைக்கு அரிசி ஒரு மணிகூட வரவில்லை.

கிருஷ்ணகிரி வியாபாரிகள் வந்து ரைஸ் மில்லிலேயே அரிசியை வாங்கி மூட்டைதைத்து வண்டியேற்றிவிட்டனர். ஏழைகளோ அரிசி கிட்டாமல் அலைந்துகொண்டிருந்தனர்.

மூட்டையேற்றிய வண்டிகள் சந்தைப் பேட்டையைத் தாண்டித்தான் போக வேண்டும். தோட்டி, தலையாரி, முன்சீப் உதவியுடன் நம் கட்சித் தோழர் சென்று வண்டிகளை நிறுத்தினர். இரண்டு வண்டிகளை அங்கேயே நிறுத்திவிட்டு ஒரு வண்டி சந்தைக்கு ஓட்டிச் செல்லப்பட்டது. விலை நிர்ணயக்கமிட்டி விதித்தபடி ரூபாய்க்கு 3¼ படி விற்பனை. பஞ்சாயப் பறந்தது. தாம்ஸன் பேட்டை ஏழைகள் நிரம்பிய எக்ஸ்டென்ஷன். முகம்மதிய சகோதரர்கள் அதிகம். அவர்களுக்கு அரிசிகிடைத்ததால் சந்தோஷம். "சபாஷ்! இது தான் நியாயம்" என்று வாழ்த்தினர். பின்னர் உணவுப்பொருள் நெருக்கடியைத் தவிர்க்க கம்யூனிஸ்டுக் கட்சி காட்டும் வழியை நீண்டநேரம் கேட்டனர். நமது ஒற்றுமை இயக்கத்திற்கு இங்கு பரிபூரண ஆதரவு கிடைக்கும் என்ற உறுதியான நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது.

## திருநெல்வேலி

தூத்துக்குடியிலிருந்து நமது தோழர்கள் சென்ற 13-12-42ந் தேதியிலிருந்து பக்கத்திலுள்ள அளகாபுரி, சிலுவைப்பட்டி, தேசிகாபுரம், மாப்பிள்ளை யூரணி முதலிய கிராமங்களுக்குச்சென்று தற்சமயம் நாட்டில் இருந்துவரும் நெருக்கடியைத் தவிர்க்கவும், தேசிய சர்க்காரைப் பெறவும், அனைவரும் ஒன்று சேரவேண்டிய அவசியத்தை எடுத்துக்கூறினர். இவ்வாறு ஒன்றுபடுவது வெறும் தலைவர்கள் ஒப்பந்தமல்ல: ஒவ்வொருபிரச்சினையிலும் நமது கோரிக்கைகளைப் பெறுவதற்காக வளரும் பொதுஜன இயக்கம், மக்களின் சக்தி என்றும் விளக்கப்பட்டது. பின்னர் விலைவாசிக் கட்டுப்பாடு, தலைவர்களை விடுதலை செய்க முதலிய மகஜர்களில் கையெழுத்து வாங்கப்பட்டது, கிராமவாசிகள் ஒவ்வொருவரும் நமது தோழர்கள் சொன்னதை மிகவும் ஆவலோடு கேட்டது மல்லாமல் இதுவே தற்சமயம் விடுதலையைக் கொண்டுவரும் ஒரேபாதை என்று ஒப்புக்கொண்டதும் குறிப்பிடத்தக்கது.

### ஒன்றுபட்டதால் உணவு பெற்றனர்

திருவிதாங்கூரிலே உணவுப் பஞ்சம் அதிகரித்து வருகின்றது. என்ன விலை கொடுத்தாலும் அரிசி கிடைப்பது அரிதாகி விட்டது. திருவிதாங்கூரிலுள்ள ரயில்வேத் தொழிலாளிகள் தந்திகள் மூலமும் கடிதங்கள் மூலமும் இந்தக் கஷ்டங்களை ரயில்வே நிர்வாகத்திற்குத் தெரிவித்திருந்தார்கள். தென்னிந்திய ரயில்வேத் தொழிலாளர் சங்கத்தின் மூலமும் அறிவித்தார்கள். நிர்வாகமோ கடந்த நவம்பர் மாத நடுவில் கொல்லத்துக்கும் திருவனந்தபுரத்துக்கும் சில அரிசி மூட்டைகளை அனுப்பிவிட்டு அக்கடா வென்று சும்மாயிருந்து விட்டது. இதனால் நிலைமையைச் சமாளிக்க முடியுமா?

டிசம்பர் 16ந் தேதி தென்னிந்திய ரயில்வேத் தொழிலாளர் சங்கத்தின் கொல்லம் கிளை ஒரு தீர்மானம் போட்டது. அரிசி சப்ளையைத் தேவைக்குத் தக்கபடி அதிகரிக்காவிட்டால் தொழிலாளிகள் பட்டினி கிடந்து கொண்டே வேலைசெய்ய முடியாது என்று அதிலே குறிப்பிடப்பட்டது. தீர்மானம் ரயில்வே ஏஜெண்டுக்கு அனுப்பப்பட்டது. சங்கத்தின் பொதுக் காரியதரிசி பிரதம கமர்சியல் சூப்பிரண்டைக் கண்டு பேசினார். வாராவாரம் நூறு மூட்டைகளுக்குக் குறையாமல் அரிசி சப்ளை செய்வதாயும், சமஸ்தானத்திலுள்ள ரயில்வேத் தொழிலாளிகளிடமிருந்து அரிசி இல்லை என்ற குற்றச்சாட்டே ஏற்படாமல் கவனித்துக்கொள்வதாகவும் சூப்பிரண்டு வாக்களித்தார். உடனே தேவையான அளவுக்கு அரிசி மூட்டைகள் கொல்லத்துக்கும் திருவனந்தபுரத்துக்கும் அனுப்பப்பட்டன. தொழிலாளர் ஒன்றுபட்ட கிளர்ச்சியால் உணவு பெற்றனர்.

## வட இந்தியாவில்

### வண்டிகளைத் திருப்பி தானியம் வாங்கினர்

மஹாராஷ்டிராவில் ஷோலாப்பூர் ஜில்லாவிலுள்ளது தூத்னி கிராமம். அங்கே ஜனங்கள் உணவுப் பொருள் கிடைக்காமல் வாடுகின்றார்கள். ஆனால் அதிகாரிகள் அங்கிருந்து வெளியூர்களுக்காகத் தானியங்களை வண்டிகளில் ஏற்றிச் சென்று கொண்டிருந்தனர். ஜனங்களுக்கு சமாச்சாரம் எட்டியது. உடனே கூட்டமாக வந்து வண்டிகளை வளைத்துக் கொண்டனர். மறுபடியும் கிராமத்திற்கே தானியங்களைத் திருப்பிக்கொண்டுவந்தார்கள். அதிகாரிகளைக் கொண்டே கட்டுப்பாட்டு விலைக்கு அத்தனை தானியங்களையும் விற்கும்படி நிர்ப்பந்தித்தார்கள்.

### மண்ணெண்ணெய் கிடைத்தது

பாரிஸால் வங்கமாணத்திலுள்ள ஒரு ஜில்லா. அங்கே ஏராளமாக நெல்விளைகிறது. ஆனால் இப்போது அங்கே அரிசி விலை ஆகாயத்தை எட்டிவிட்டது. சர்க்கரை மண்ணெண்ணெய் முதலிய சாதனங்களும் கிடைப்பது கஷ்டமாக விருக்கிறது. வியாபாரிகளின் கொள்ளை லாபம் மக்களை அரித்துத் தின்கிறது.

நமது கம்யூனிஸ்டுத் தோழர்கள் ஜில்லா முழுவதுமுள்ள மக்களை உணவுப் பிரச்சினைக்காக ஒன்றுதிரட்ட முன்வந்தனர். லாபக் கொள்ளையை ஒழிக்கவும் தேவைக்கேற்ற சர்க்கரை மண்ணெண்ணெய் அரிசி முதலிய சாதனங்கள் கிடைப்பதற்காகவும் கிளர்ச்சி செய்தனர்; மகஜர்கள் அனுப்பினர். அதிகாரிகள் 900 டின் மண்ணெண்ணெய் சப்ளை செய்வதாகவும் அதுவும் கட்டுப்பாடு விலைக்கு விற்பதாகவும் உறுதிகூறினர்.

அடுத்தபடியாக காங்கிரஸ் லீக், கம்யூனிஸ்டுக் கட்சி, கிஸான் சபை, ஹிந்து முஸ்லீம்களைக்கொண்ட மத்திய உணவுக் கமிட்டிகளை நிறுவினர். பத்து வார்டாகப் பிரித்து வார்டுக் கமிட்டிகள் ஏற்படுத்தினர். ஒழுங்காக இப்போது பங்கீடு செய்யப்பட்டு எல்லோருக்கும் மண்ணெண்ணெய் சப்ளை செய்யப்படுகிறது. கொள்ளை லாபக்காரர் வாயிலே மண் விழுந்தது. இதே போல சர்க்கரையும் விநியோகிக்கப்பட்டு வருகிறது. அங்கே ஒரு ஜில்லாப் பொதுஜன உணவு மகாநாடு சமீபத்தில் கூடும்.

### ஈத் பண்டிகைக்குச் சர்க்கரை

நந்தகானில் ஈத் பண்டிகை. ஒரு வீட்டிலாவது சர்க்கரை கிடையாது. காசு கொடுத்தாலுமில்லை கெஞ்சிக் கேட்டாலும் இல்லை. வியாபாரிகளோ மார்கெட்டுகளில் ஸ்டாக்குகளை ஒளித்துவைத்திருந்தார்கள். கட்டுப்பாட்டு விலைக்கு விற்க அவர்கள் இஷ்டப்படவில்லை ஏன்? லாபக்கொள்ளை வீணாவதா! அதிகாரிகள் கவலைப்படவேயில்லை. ஜனங்கள் கிளர்ச்சிக்கு ஆரம்பித்தனர்.

200, 300 முஸ்லீம்கள் சர்க்கரைக்கடை வாசலில் நின்றார்கள். அவர்களுக்குத் தெரியும் வியாபாரிகள் சர்க்கரையை ஒளித்து வைத்திருக்கிறார்கள் என்று. தோழர் கோவிந்த தேலி அங்கே போனார். சூறையாடல் கூடாது அதனால் சர்க்கரை கிடையாது நாட்டில் குழப்பம் தான் நேரிடும். ஆகவே திரண்டுநின்ற மக்களைச் சேர்த்துக்கொண்டு ஸ்தல அதிகாரியிடம் போனார் நமது தோழர்.

ஒளித்து வைத்திருந்த சர்க்கரை மூட்டைகளைக் காட்டினார். இதனால் விற்பனைக்கு 5 மூட்டை கிடைத்தது. ஈத் பண்டிகைக்கு முஸ்லீம் சகோதரர்களுக்கு சர்க்கரை கிடைத்தது.

கட்டுப்பாட்டு விலைக்கு அரிசி விற்க வேண்டும் என்று தமுக்குப் போடப்பட்டது. ஆகவே ஜனங்கள் ஓர் அரிசிக் கடையின் முன் கூடினார்கள். கடையைத் திறக்கச் செய்து அரிசி விநியோகிக்கச் செய்தார்கள். வியாபாரி கட்டுப்பாட்டு விலைப்படி பணம் வாங்கிக் கொள்ள மறுத்துவிட்டான். அதிகப்பணம் கேட்டான். தோழர் தேலி எல்லோரிடமும் அரிசிக்கான பணத்தை வசூல் செய்தார். ஸ்தல அரசாங்க அதிகாரியிடம் ஒப்படைத்தார். ஜனங்கள் வியபாரிகளை மோசம் செய்யவிரும்பவில்லை; ஆனால் அவர்களால் தாங்கள் மோசம் போவதற்கும் இடம் கொடுக்கமாட்டார்கள். ஆனால் அதிகார வர்க்கத்திற்கு மக்கள் ஒன்று திரளுவது கண்டால் அச்சந்தானே. ஆகவே தேலியைக் கைது செய்தது.

---

### சிறுவனின் தேசபக்தி

இரண்டு லட்சநிதி வசூலில் ஒரு சம்பவம். மதுரையில் ஒரு வீட்டில் ஒரு பஞ்சுவியாபாரிக்கும் இரண்டு பெண்களுக்கும் நமது கட்சியின் வழியைப்பற்றி நமது தோழர் விளக்கிக்கூறினார். பிறகு இரண்டு லட்ச நிதிக்காகப்பணம் கேட்டார். இதையெல்லாம் கவனமாய்க் கேட்டுக் கொண்டிருந்தான் அங்கிருந்த ஒரு சிறுவன். வயது பனிரெண்டுதான். ஆறுவது வகுப்பில் படிப்பவன். தின்பண்டம் வாங்கித் தின்பதற்காகக் கையில் ஓரணா வைத்திருந்தான். அச்சிறுவன் நமதுதோழரைப் பார்த்து அன்புடன் "ஜப்பானை எதிர்த்து நம் தேசம் சுதந்திரம் அடைய உழைக்கும் கம்யூனிஸ்டுக் கட்சிக்கு இந்த ஓரணாவைக்கொடுக்க விரும்புகிறேன் வாங்கிக்கொள்ளுங்கள்" என்றான். பிறகு சோவியக் ரஷ்யாவின் வீரச் சிறுவன் மான்யாவின் கதையை அச் சிறுவனுக்கு நம் தோழர் சொன்னார். உடனே அவன் "ஜப்பான் வந்தால் நானும் அப்படியே நமது தாய்நாட்டைக் காப்பேன்" என்று உறுதியுடன் கூறினான்.

# மக்களை காக்க மாணவர் ஐக்கியம்

எம். ஆர்.]

தேசிய இயக்கத்தில் மிகவும் முக்கியமான பகுதி, நமது மாணவர் இயக்கம். விடுதலை ஆர்வம் மிகுந்த பகுதி. நான்கு மாதங்களுக்குமுன் தேசத் தலைவர்கள் கைதுசெய்யப்பட்ட பொழுது வேலைநிறுத்தப் புயல் மாணவர் அரங்கத்தில் வீசிற்று. சில இடங்களில் தொடர்ச்சியாக வேலைநிறுத்தம் நடைபெற்றது. அவ்விடங்களில் கலாசாலைகள் மூடப்பட்டன. அதிகாரவர்க்கத்தின் கோபம் மாணவர்கள் மேல் பாய்ந்தது. மாணவர்கள் அரசியலில் பங்கெடுத்துக்கொள்ளக்கூடாது என்று உபதேசம் செய்ய முன்வந்தார்கள் சில அதிகாரவர்க்க மனப்பான்மை கொண்ட காலேஜ் நிர்வாகிகள். கல்விக்கும் தேசபக்திக்கும் முரண்பாடு கிடையாது, முரண்பாடிருக்கக்கூடாதென்று இந்தப் பிற்போக்குக் கும்பல்களுக்கு எவ்வாறு தெரியும் ?

## மாணவர்கள் மேல் பாய்ச்சல்

இன்று மாணவர்கள் எங்கும் "தொடர்ச்சி வேலைநிறுத்த" ஸ்லோகத்தை விட்டுவிட்டனர். கலாசாலைகளுக்குத் திரும்புகின்றனர். மாணவர்களைத் தாக்கி அவர்களது உரிமைகளைப் பறிக்க இதுதான் சமயமென்று அதிகாரவர்க்கம் நினைக்கிறது. அரசியலில் பங்கெடுத்துக்கொள்ளுவதில்லை என்று பெற்றோர்களிடமும் மாணவர்களிடமும் உத்தரவாதச்சீட்டுகள் கேட்கப்படுகின்றன. பீஹாரில் பள்ளிக்கூடப் பாதுகாப்பு என்றபேரில் அபராதங்கள் மாணவர்கள் மேலும் உபாத்தியாயர்கள் மேலும் விதிக்கப்பட்டுள்ளன ; அகில இந்திய மாணவர் சம்மேளனம், முஸ்லீம் மாணவர் சங்கம், இதர அரசியல் கட்சிகளில் அங்கத்தினராயிருக்கக்கூடாதென்ற தடையுத்தரவு அங்கு அமுலிலிருக்கிறது. ஸ்டிரைக்குகளில் பங்கெடுத்துக்கொண்ட மாணவர்கள் ஆங்காங்கு நீக்கப்பட்டும், அபராதம் போடப்பட்டும் பழிவாங்கப்படுகின்றனர். காங்கிரஸ், கம்யூனிஸ்ட் மாணவர்களுக்குச் சிறைவாசமும் கிடைத்துள்ளது. தமிழ்மாகாண மாணவ சம்மேளனக் காரியதரிசி தோழர் சங்கரய்யாவை பாதுகாப்புக் கைதியாக வைத்திருக்கிறது அதிகாரவர்க்கம்.

இத்தகைய நிலைமை ஐந்தாம்படையினருக்குக் கொண்டாட்டமாயிருக்கிறது. மாணவரின் ஒற்றுமையில் பிறந்த பொதுஜன சக்தியில் நம்பிக்கையற்றவர்களுக்கு மனச்சோர்வும், பிளவுகளும் மாணவர்களுக்குள் நிலவிவந்தால் திருப்திதானே. 'கலாசாலைக்குச் செல்லாதீர்கள்' என்று துர்ப்போதனை செய்கிறார்கள். ஆனால் மாணவர்கள் கேட்பதாயில்லை. அதிகாரவர்க்கத்தின் சூழ்ச்சிகளுக்கும் ஐந்தாம் படையினரின் தூண்டுதல்களுக்கும் இரையாகி தேசிய சக்திகளை இழக்க இன்று மாணவர்கள் விரும்பவில்லை. நாடு சுதந்திரம் பெறவேண்டுமென்ற ஆர்வம் மாணவர்களிடம் ஓங்கி நிற்கிறது. ஆனால் நாசவேலைகள் இன்று சுதந்திரப் பாதையல்ல என்று அனுபவமூலம் உணருகிறார்கள். தன்னந்தனியாக நின்று சில மாணவர்கள் செய்யும் செய்கைகளையே சாக்காகக் காட்டி அதிகாரவர்க்கம் அமுல் நடத்துகிறது என்று உணருகிறார்கள். அடக்குமுறையை வெறுப்பதுடன் நாசவேலைகளையும் அடியோடு நிராகரித்துத் தடுக்க முன்வருகிறார்கள்.

ஆனால் நிலைமை எங்கும் கவலைக்கிடந்தருவதாய்த்தான் இருக்கிறது. மாணவர்கள் தாங்கள் இழந்துள்ள உரிமைகளைப் பெற்றாகவேண்டியிருக்கிறது. கல்வி தடைப்பட்டுள்ளது ; கலாசாலை உரிமைகள் பாதிக்கப்படுகின்றன ; உணவுப் பொருள் நெருக்கடியும் மாணவர் வாழ்வை சங்கடப்படுத்தி வருகிறது. இத்தகைய நிலைமையில் அதிகாரவர்க்கத்தின் கோபத்தினால் தூண்டப்பட்டு ஆவேசச் செயல்களில் இறங்கினால் நாட்டைப் பாசிஸக் குரூர ஆட்சிக்குத்தான் இன்று கொண்டுசேர்க்கும் என்பதும் தெரிகிறது.

## வழி என்ன ?

அப்படியானால் மாணவர்கள் என்னதான் செய்யவேண்டும் ! இதற்கான வழியைத்தான் அகில இந்திய மாணவர்சம்மேளனம் இன்று மாணவர்களுக்குக் காட்டுகின்றது. அதிகாரவர்க்கத்தின் பாய்ச்சலுக்கும், காலேஜ் நிர்வாகங்களின் பிற்போக்குக்கும் பதிலளிக்கக் கூடியது மாணவர்களின் ஒற்றுமையே. மாணவர்கள் தங்கள் ஒன்றுபட்ட பலத்தில் பரிபூர்ணமாய் நம்பிக்கை வைக்கவேண்டும். எத்தகைய பிளவுகளுக்கும் இடங்கொடுக்கக்கூடாது. போட்டிச் சங்கங்களுக்கு வழியில்லை. எல்லோரும் ஒரே குரலில் அகில இந்திய மாணவ சம்மேளன மூலம் ஸ்தாபன ரீதியான பலத்துடன் பேசினால் எந்தத் திமிர்பிடித்த கும்பலும் மாணவர்களின் ஒன்றுபட்ட சக்திக்கு பணிந்தாக வேண்டும். மாணவர்களுக்குள் எத்தகைய அபிப்பிராயபேதங்கள் இருப்பினும் குறிப்பான, பொதுவான, மாணவர்களைப் பாதிக்கும் பிரச்சினைகளில் ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும், ஒவ்வொரு காலேஜிலும் மாணவர்கள் ஒன்றுசேர முடியும். இந்தப் பிரச்சினைகளில் மாணவர்கள் ஒன்றுசேருவதே ஒரு இயக்கம், அவரது உரிமைகளைப் பெறும் வழி ! இதர தேசீயப் பகுதிகளுக்கும் ஒற்றுமையை வளர்த்து தேசிய சர்க்காரைப் பெற்று நாட்டைக் காக்க, ஒரு நடைமுறை உதாரணம். இன்று மாணவர்களின் பொறுப்பு மகத்தானது. இதுவே அவர்கள் இன்று நாட்டிற்குச் செய்யவேண்டிய தொண்டு.

## சென்னையில் நடந்தது

இவ்வாறு மாணவர்களின் ஒற்றுமை வளரமுடியும் என்பது தமிழ்நாட்டிலேயே தெளிவாகி வருகின்றது. தேசீயத் தலைவர்கள் கைது செய்யப்பட்ட பிறகு சென்னையில் மாணவர் பகுதிகளுக்குள் நெருக்கடி மிகுந்தது. வேலைநிறுத்தங்கள் இங்குமங்கும் நடைபெற்றன. சில காலேஜ் நிர்வாகங்கள் இஷ்டப்படி நடக்கலாயின. அதிகாரவர்க்கமும் தாக்குதலை ஆரம்பித்துப் பிளவுகளை அதிகப்படுத்தியது. மாணவர்களுக்குள்ளிருந்த அபிப்பிராய பேதங்கள் முற்றின. மனச்சோர்வு தோன்றலாயிற்று. மெடிகல் காலேஜில் அக்டோபர் 2-ந் தேதி காந்திஜீ பிறந்த தினத்தன்று மாணவர் ஊர்வலம் அனுமதியின்றிக் கிளம்பியதென்று 10 மாணவர்கள் கைது செய்யப்பட்டனர். ஆனால் மூன்றுதினங்களுக்குள், பெண்கள், முஸ்லீம்கள் உட்பட எல்லா மாணவர்களும் ஒன்றாய் நின்றதன் காரணமாகக் கைது செய்யப்பட்ட மாணவர்கள் நிபந்தனையின்றி விடுதலை செய்யப்பட்டனர்.

சென்ற மாதம் வங்காளத்தில் ஏற்பட்ட கஷ்ட நிவாரணத்திற்காகச் சென்னை மாணவர்கள் நிதி திரட்டப் பொதுமக்களை அணுகினர். இந்த முயற்சி சென்னை மாணவர் சங்கத்தின் ஆதரவில் நடந்தது. மாணவர்களிலிருந்த எல்லா அரசியல் பகுதிகளும் பங்கெடுத்துக்கொண்டனர். இரண்டு மூன்று வாரங்களுக்குள் வீடுவீடாகவும் தெருத்தெருவாகவும் சென்றதில் 1300 ரூபாய்க்கு மேல் வசூலாயிற்று. இந்தப் பொதுவான பிரச்சினையில் செய்கை ஒற்றுமை ஏற்பட்டதன் மூலம் அபிப்பிராய பேதங்கள் குறைந்து சென்னை மாணவர் சங்கம் ஒன்றுபட்ட பெரும் சக்தியாகக் கிளம்புமென்பதில் சந்தேகமில்லை.

## பதிலளிக்க முடியும்

இதேமாதிரி அண்ணமலை சர்வகலாசாலையில் ஏற்பட்டுள்ள நிலைமையையும் மாணவர்கள் சமாளிக்க முடியும். 'போராட்டத்தில்' சம்பந்தப்பட்டதாகச் சில மாணவர்கள் கலாசாலை அதிகாரிகளால் பழிவாங்கப்பட்டிருக்கின்றனர். மாணவர்களுக்குள் பிளவுகள் இருக்கும்வரை அதிகாரவர்க்கமும், கலாசாலை நிர்வாகங்களும் இறுமாப்புடன்தான் இருக்கும். இன்றுள்ள நிலைமையில் மாணவர்களின் ஒற்றுமையின்மைதான் பிற்போக்காளர்களுக்குள்ள ஒரே ஆயுதம். இம்மாதம் பெருவாரியான மாணவர்கள் சேர்ந்து தூதுகோஷ்டியாகச் சென்று நிர்ப்பந்தித்ததன் பேரில் 'லீவிங் சர்டிபிகேட்' கொடுத்த ஆறு மாணவர்களை எடுத்துக்கொள்ளுவதாகவும், கலாசாலையிலிருந்து நீக்கப்பட்டவர்களை எடுக்க முடியாதென்றும் முடிவு சொல்லப்பட்டதாகத் தெரிகிறது. அண்ணமலை மாணவர்கள் ஒன்றுபட்டு நின்றால் எல்லோரையும் சேர்த்துகொள்ளக் கலாசாலை நிர்வாகத்தை நிர்ப்பந்திக்க முடியும். இந்தப் பிரச்சினையைத் தங்களுடைய பொதுவானப் பிரச்சினையென்று உணர்ந்து அண்ணமலை மாணவர்கள் மட்டுமல்ல இம்மாகாணத்திலுள்ள எல்லா மாணவர்களும் கிளர்ச்சி செய்து இதன் மூலம் ஒன்றுபட்டும் வருகின்றனர்.

மதுரை அமெரிக்கன் காலேஜிலிருந்து காரணமின்றி நீக்கப்பட்ட மாணவர்களும் தங்களுடைய தோழர்களை மீண்டும் அடைய மாணவர் சங்கத்தை பலப்படுத்திக் கிளர்ச்சி செய்வதுதான் ஒரே வழி. தோழர் சங்கரய்யா விடுதலையும் இதே போன்ற பொதுவான பிரச்சினை. இவ்வாறு தேசீயப் பகுதிகள் ஒன்றுபடுவதுதான் அதிகாரவர்க்கத்தைப் பணியவைக்கும் வழி.

அகில இந்திய மாணவர் சம்மேளனத்தில் தங்கள் தங்கள் ஜில்லா மாணவர் சங்கங்களின் மூலம், மாகாண சம்மேளனங்களின் மூலம் தமிழ்நாட்டு மாணவர்கள் ஒன்றுபட்டுத் தங்களது குறைகளை நீக்கிக்கொண்டு நாட்டிற்குத் தொண்டாற்ற முன்வரவேண்டும். ஒவ்வொரு பிரச்சினையிலும், ஒற்றுமை வழியை, வளரும் பொதுஜன இயக்கமாக மாணவர்கள் கண்டிப்பாய் நிரூபிக்க முடியும். இந்த வேலையில் நமது மாணவர்கள் உடனடியாய் ஈடுபடுவார்களாக.

# 2 லக்ஷத்தை 10 லக்ஷம் ஆக்குக

மத்தியக் கமிட்டிக் கூட்டத்தில் 2 லக்ஷ நிதிவசூல் செய்வதென்று தோழர் ஜோஷி கூறிய பொழுது தமிழ்நாடு ரூ. 5000 வசூலிப்பதாக வாக்குறுதி அளித்தோம். ஆனால் தமிழ் நாட்டுத் தோழர்கள் நம் நாட்டில் ரூ. 5000தானா என்றுகூறி அதைரூ.20,000 ஆக்கவேண்டுமென்றனர். ஆந்திரத் தோழர்கள் தங்கள் ரூ. 50,000 வாக்குறுதியளித்ததை முதலில் 1 லக்ஷமாக்கி, இப்பொழுது 2 லக்ஷமாக்கிவிட்டனர். கேரளத் தோழர்களும் பின்வாங்கவில்லை. தாங்கள் 1 லக்ஷம் ரூபாய் வசூலிப்பதாகச் சொல்லிவிட்டனர். தமிழ் நாட்டிலே ஒரு தோழர் தன்சொத்து முழுவதையும் விற்று ரூ. 6,500 கொடுத்துவிட்டார். இன்னும் சில தோழர்கள் அவ்வாறே விற்பனை செய்து கட்சி நிதியைப் பெருக்க முன்வந்துவிட்டனர். பிரியமாய் வைத்திருந்த பொருட்களையும் கட்சிக்குக் கொடுத்துதவ வந்திருக்கின்றனர். இவற்றை இன்னொரு இதழில் பிரசுரிக்கிறோம்.

இதையெல்லாம் பார்த்து நமது கட்சிக் காரியதரிசி "தென்னாட்டில் கட்சிநிதி வசூலில் ஸோஷலிஸ்ட் போட்டி வந்துள்ளது. இது அனைவருக்கும் வழிகாட்டவேண்டும். நாம் 2 லக்ஷமல்ல 10 லக்ஷ ரூபாய் வசூல் செய்யவேண்டும்" என்று 'பீப்பிள்ஸ் வாரில்' எழுதி இருக்கின்றார்.

தமிழ் நாட்டிலே நம் தோழர்கள் போல்ஷவிக் போட்டியில் ஓய்வுக்கு இடமில்லை என்று உணர்ந்து நம் வசூலையும் அதிகரிக்காவிட்டால் இந்தப்பணியில் நாம் கடைசி பிரைஸ் வாங்கிவிடுவோம். கீழே டிசம்பர் 20-ந் தேதிவரை வந்த பணவசூல் விவரம் ஜில்லாவாரியாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

நமது ஜில்லாக்களில், ஒவ்வொரு கிளையின் அங்கத்தினர்களிடையிலும், இந்தப் போட்டி பரவி நமது மாகாண வசூல் ரூ. 20,000 த்திலிருந்து 1 லக்ஷம் ஆகும்படி செய்யவேண்டும்.

| | ரூ. | அ. | பை |
|---|---|---|---|
| சென்னை ... ... | 3,144 | 2 | 2 |
| செங்கல்பட்டு ... ... | 39 | 6 | 0 |
| கோயமுத்தூர் ... ... | 420 | 6 | 0 |
| மதுரை ... ... | 459 | 9 | 6 |
| சேலம் ... ... | 210 | 8 | 0 |
| திருநெல்வேலி ... ... | 74 | 10 | 0 |
| ராமநாதபுரம் ... ... | 70 | 6 | 6 |
| தெ. ஆற்காடு ... ... | 67 | 3 | 0 |
| வட ஆற்காடு ... ... | 39 | 15 | 0 |
| தஞ்சாவூர் ... .. | 196 | 5 | 0 |
| திருச்சி ... ... | 6,651 | 3 | 0 |
| ரயில்வே தோழர்கள் ... | 157 | 13 | 0 |
| திருவாங்கூர் (சமஸ்தானம்). | 4 | 8 | 0 |
| மா.க. அங்கத்தினர்கள்; மா.க. காரியாலயம் ... | 2,639 | 6 | 9 |
| மொத்தம் ... | 14,175 | 5 | 11 |

## ஏகாதிபத்தியக் கனவுகள் பலிக்காது

### வளர்ந்து வரும் மக்களின் சக்தி

இந்த யுத்தத்தில் ஏகாதிபத்தியக் கனவுகளுக்கு இடமில்லை. மக்களின் சக்தி மேலும் மேலும் வளர்ந்து மக்களின் வெற்றிக்கு முட்டுக்கட்டையாயிருக்கும் பிற்போக்குக் கும்பல்களை நெருக்குகிறது. உலக மக்களின் தொடர்பும் எழுச்சியும் வளர்ந்து வருகின்றன. தொழிலாள வர்க்கத்திற்கு மக்கள் அளிக்கு[illegible] ஆதரவு பெருகிவருகின்றது. இதற்கு உதாரணமாக லண்டனிலிருந்து 'பீப்பிள்ஸ் வார்' பத்திரிகைக்கு ஐவர் மாண்டேகு அனுப்பியுள்ள செய்தியின் சாராம்சத்தைக் கீழே தருகிறோம்:-

டார்லான் கோஷ்டிக்குக் காட்டப்படும் சலுகை பிரிட்டனில் மக்களிடம் அசாத்தியக் கோபத்தை மூட்டியிருக்கிறது. இந்த உறவு உடனே ஒழிய வேண்டுமென்று மக்கள் பலத்த கிளர்ச்சி செய்து வருகிறார்கள். டார்லான் ஆட்சிக்குட்பட்ட வட ஆப்பிரிக்க நாடுகளில் உண்மையான பாஸிஸ்டு எதிர்ப்பாளர்கள் இன்னுமநேகர் சிறையிலேயே வாடுகின்றனர். பாஸிஸ்டு மனோபாவங்கொண்ட கும்பல்களிலிருந்து பொறுக்கி எடுத்து போலீஸ் அதிகாரிகளாக டார்லான் நியமித்திருக்கிறான். ஸ்பெயின் தளபதிகளுடன் உறவு வைத்துக்கொண்டிருக்கிறான். இந்த மாஜி விச்சி பேர்வழியுடன் எத்தகைய ஒப்பந்தங்களும் கூடாது என்று தொழிற்சங்கங்களிலிருந்து தீர்மானங்கள் அரசாங்கத்திற்கு அனுப்பப்பட்டுள்ளன. டார்லான் ஆட்சி நேசதேச ராணுவங்கள் முன்னேறுவதற்கே பெரும் ஆபத்து என்ற எச்சரிக்கை வலுத்து வருகிறது.

### பிராங்கோ என்ன செய்வான் ?

போனவாரம் ஸ்பெயின் சர்வாதிகாரி பிராங்கோ பேசினான். அதில் பிரதேசங்களைக் கோரி நேச நாடுகளை பயமுறுத்தினான். ஹிட்லருக்கு ஆயுதங்கள் செய்து குவிக்கும் அவனது தொழிற்சாலைகள் இரவு பகல் வேலை செய்வதற்கு முட்டுக்கட்டை போடக் கூடாதென்று எச்சரிக்கை செய்தான். "டெயிலி ஒர்க்கர்" (பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுக் கட்சியினுடையது) பத்திரிகை இதைக் குறிப்பிட்டு எழுதியிருக்கிறது. பிராங்கோவுக்கு எதிராக ஒரு முடியரசை ஏற்படுத்துவதற்கு பிரிட்டிஷ் அரசாங்கத்தின் வெளிநாட்டு இலாகா செய்துவரும் சூழ்ச்சிகளை பகிரங்கப்படுத்தியது. மற்ற பத்திரிகைகள் இதை பற்றி வாய்திறக்கவேயில்லை.

### மோஸ்லி கும்பலின் வெறியாட்டம்

"டெயிலி ஒர்க்கர்" இன்னுமொரு விஷயத்தை வெளிப்படுத்தியிருக்கிறது. அதாவது, பிரிட்டிஷ் பாசிஸ்டுத் தலைவனும் ஹிட்லரின் பகிரங்க ஏஜெண்டுமான ஸர். ஆஸ்வால்ட் மோஸ்லியின் பேர்போன சகாக்கள் சமீபத்தில் பாதுகாப்பிலிருந்து விடுதலை செய்யப்பட்டனர். இந்தக் கும்பல் பாசிஸ்டு ஸ்லோகங்களைக் கிளப்பிக்கொண்டு பார்லிமென்டில் சில அங்கத்தினர்கள் ஆதரவுகூட உண்டு என்றுகூறிச் சுற்றித் திரிகிறது. இதைக் கோபத்துடன் மறுத்திருக்கின்றனர் அந்த பார்லிமென்ட் அங்கத்தினர்கள். பார்லிமென்டில் இதைப்பற்றிக்கேள்விகளும் போடப்படும். இவ்வாறு டெய்லி ஒர்க்கர் பத்திரிகையின் முயற்சியால் அதிகார பீடங்களிலுள்ள பாசிஸ அனுதாபிகளின் செயல்கள் பட்டவர்த்தனமாயிருக்கிறது.

### 13 வாரத்தில் ஐம்பதாயிரம்

'டெயிலி ஒர்க்கர்' பத்திரிகை செப்டம்பர் மாதம் மீண்டும் வெளிவந்தது. அதற்காக 50 ஆயிரம் பவுன் நிதி திரட்ட வேண்டுகோள் விடுத்தது. பதின்மூன்றே வாரத்தில் 'டெயிலி ஒர்க்கர்' வாசகர்கள் ஐம்பதாயிரம் பவுன் திரட்டிவிட்டார்கள்.

### சீனாவுக்கு வாழ்த்து

பேர்ள் துறைமுக ஆக்கிரமிப்பின் வருஷாந்திர சந்தர்ப்பத்தில் சீன அரசாங்கத்திற்கும், சீனமக்களுக்கும், சீனக் கம்யூனிஸ்டுக் கட்சிக்கும் பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுக் கட்சியின் மத்தியக்கமிட்டி தந்திமூலம் வாழ்த்துக்கூறியது.

ஹிட்லருக்கு எதிராக சோவியத் முனையிலும் வடஆப்பிரிக்காவிலும் ஏற்பட்ட வெற்றிகளும், ஜப்பானியத் தாக்குதலை எதிர்த்து சீனமுனையிலும் பசிபிக்கிலும் ஏற்பட்ட முன்னேற்றமும் பாசிஸத்தைத் தகர்த்துப் பாழ்படுத்தும் பாதையைத் திறந்து விட்டிருக்கின்றன என்று மத்தியக் கமிட்டி குறிப்பிட்டிருக்கிறது.

தொழிலாளர் இயக்கம்

# வேலைநிறுத்த உரிமையை இழக்கமாட்டோம்

## தொழில் தகராறு மசோதாவுக்கு எங்கும் எதிர்ப்பு

சென்னை சர்க்கார், நிர்ப்பந்த மத்தியஸ்தம் என்ற பேரால் தொழிலாளிகளின் வேலைநிறுத்த உரிமையைப் பறிக்க அமுலுக்குக் கொண்டுவர விரும்பும் தொழில் தகராறு மசோதாவுகருக் தமிழ்நாடு முழுவதும் எதிர்ப்புக் கிளம்பியிருக்கிறது. இந்தக் கிளர்ச்சியை அரசாங்கம் கவனித்துத் தொழிலாளர்கள் கோரும் திருத்தங்களை ஏற்றுக்கொள்ளாவிட்டால் மசோதா ஏட்டோடுதான் நிற்குமென்பதில் ஐயமில்லை.

வேவலநிறுத்த உரிமையைப் பறிக்கும் எத்தகைய அதிகாரவர்க்கத்தின் முயற்சியையும் தொழிலாள வர்க்கம் பார்த்துக் கொண்டு சும்மா இராது. இன்றைய நெருக்கடியான நிலைமையில் வேவலநிறுத்த உரிமை அவசரப்பட்டு உபயோகிக்கும் வழி அல்ல. சமரசப் பாதைகள் நன்கு கையாளப்பட்டு முதலாளிகளும் அதிகாரவர்க்கமும் பிடிவாதப் பிற்போக்கிலிருந்தால்தான் வேவலநிறுத்த முறை அமுலுக்கு வருகிறது. இந்த இறுதி ஆயுதத்தை இழந்துவிட முடியாது.

நாட்டைக் காக்கவும் உற்பத்தியைப் பெருக்கவும் இதரர்களைவிடத் தொழிலாள வர்க்கம் இன்றுமுன்னணியில் வந்து ஆர்வத்துடன் வழிகாட்டுகிறது. இந்த வேலையில் அவர்களது குறைந்தபட்சக் கோரிக்கைகளை அவர்கள் பெற்ருகவேண்டும். அமைதி என்ற பெயரால் தொழிற்சங்க அங்கீகாரம், தகுந்த பஞ்சப்படி இவைபோன்ற தொழிலாளர்களின் கோரிக்கைகளை நிராகரித்து விட முடியாது. இவ்வாறு செய்வது உற்பத்திக்குத்தடை செய்வதாகும், நாட்டுப் பாதுகாப்புக்கு ஆபத்து விளைவிக்கும் செய்கை. ஜனசக்தியில் பிரசுரித்திருந்த மாகாணக்கமிட்டியின் விமர்சனத்தையொட்டி கீழ்க்கண்ட இடங்களில் தொழிற் சங்கங்கள் கீழ்க் குறிப்பிட்ட தேதிகளில் தொழிற் தகராறு மசோதாவை ஆக்ஷேபித்து ஜனசக்தியில் குறித்த திருத்தங்களை வற்புறுத்தித் தீர்மானங்கள் நிறைவேற்றி அரசாங்கத்திற்கு அனுப்பியுள்ளனர். அரசாங்கம் மசோதாவை திருத்திக்கொண்டு தொழிலாளர்களின் முக்கிய குறைகளை முதலில் நிவர்த்தி செய்ய முன்வரவேண்டும்.

14—12—42 சேலம் மில் தொழிலாளர் சங்கம், பீடித் தொழிலாளர் சங்கம், சுண்ணும்புக்கரடுத் தொழிலாளர் சங்கம், பனியன் கம்பெனித் தொழிலாளர் சங்கம், சாக்குதையல் தொழிலாளர் சங்கம், நெசவுத் தொழிலாளர் சங்கம், நகரசுத்தித் தொழிலாளர் சங்கம்.

22—12—42 மேட்டூர் மில் தொழிலாளர் சங்கம்.

23—12—42 திருச்செங்கோடு — கட்சிக் கமிட்டியின் தலைமையில் பொதுக்கூட்டம்.

20—12—42 விருதுநகர் தொழிலாளர் சங்கம்.

20—12—42 திண்டுக்கல் பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம், ரெயில்வேத் தொழிலாளர் சங்கம், தோல் பதனிடும் தொழிலாளர் சங்கம், கைநெசவுத் தொழிலாளர் சங்கம், கட்சியின் திண்டுக்கல் கமிட்டி.

14—12—42 சென்னை டிராம்வேத் தொழிலாளர் சங்கம்.

14—12—42 கோயமுத்தூர் மில் தொழிலாளர் சங்கம்.

14—12—42 தூத்துக்குடி மில் தொழிலாளர் சங்கம்.

## மேட்டூரில் கங்காணிகளின் அட்டகாசம்

மேட்டூர் நெசவாலையில் நெருக்கடி முற்றி வருகிறது. வீவிங் மாஸ்டரின் அட்டகாசம் எல்லை மீறிப்போய்க்கொண்டிருக்கிறது. சங்கத்தை உடைக்கும் சூழ்ச்சியை இன்னும் முதலாளிகள் கைவிடவில்லை. சங்கத்தில் சந்தாதாரர்களாயிருப்பவர்களுக்குத் தரி கொடுக்காமலும் வேலை கொடுக்காமலும் ஆத்திரமூட்டப் பார்க்கின்றனர். வீடில்லாமல் செய்திடுவோம் என்று உருட்டிப் பார்க்கிருர்கள். சங்கத்தில் பலாத்காரமாகச் சந்தா வசூல் பண்ணியதாகச் சொல்லும்படி போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்று மிரட்டிப் பார்க்கிருர்கள். முதலாளிகளின் கையாட்களாகச் சங்கத்தில் சேராமல் சங்கத்தை உடைக்க விரும்பும் துரோகிகளுக்குச் சலுகைக்கு மேல் சலுகை. 4 மாதம் ஆப்சென்ட் ஆன தொழிலாளி முதலாளியின் வஞ்சகவேலைக்குட்பட்டால் உடனே மேஸ்திரி வேலைதான். 3 மாத காலம் வேலை பார்த்த தொழிலாளி சம்பளம் கேட்டதற்காக உடனே கேட் பாஸ். சென்ற நவம்பர் 30-ந் தேதி இரவு மில்லுக்கு வெளியில் வீவிங் தொழிலாளி நெ. 1347 குழந்தைவேல் முதலியார் காயமடைந்ததை வைத்துக்கொண்டு சங்கத்திற்கும் இதற்கும் ஏதோ சம்பந்தமுண்டு என்றும் சங்கத்தின் நிர்ப்பந்த வசூல்தான் இதற்குக் காரணம் என்றும், சங்கத் தலைவர் சுரேந்திரனையும், தோழர் ப. ராமசாமியையும் இதில் மாட்டிவைக்கப் பார்த்தனர். ஆனல் இதில் சம்பந்தப்பட்ட தோழர் செம்பன் இத்தகைய அபாண்டமான சூழ்ச்சிக்கு ஆதரவு கொடுக்க மறுத்துவிட்டார். தோழர் செம்பனை போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச்சென்று மிரட்டியும் இந்த சூழ்ச்சி பலிக்கவில்லை. வீவிங் மாஸ்டர் தாக்குவதாக மிரட்டியும் தோழர் செம்பன் உறுதியாயிருந்தார். பொய் சொல்ல மறுத்தார்.

### பணத் திமிருக்கு எல்லையில்லையா ?

லீவ் கேட்டாலும் இதே தொல்லைதான். 15-12-42ல் தோழர் பழனிசாமி பொறுக்க முடியாத வயிற்று வலியால் லீவுகேட்டார். வந்துவிட்டது கோபம் வீவிங் மாஸ்டருக்கு. லீவ் கொடுக்க மறுத்தார். அன்றிரவு தோழர் பழனிசாமி வேதனை மிகுதியால் ½ மணி நேரம் வேலைக்குச் செல்ல முடியவில்லை. மறுதினம் இதற்காக, எதிர்த்துப் பேசியதாகப் பொய்க்குற்றம் சாட்டப்பட்டு 2 நாள் சஸ்பெண்ட் செய்யப்பட்டார். 22–12–42 ல் சங்கத் தலைவர் தன் மனைவியை அழைத்துவர லீவ் கேட்டதற்கு அடியோடு மறுக்கப்பட்டது. ‘வேலை கிடையாது, லீவ் கிடையாது, ஓடிப்போ வெளியே, டிஸ்மிஸ் செய்துவிடுவேன்’. இந்தமாதிரி உருட்டல் மிரட்டல்கள் விசேஷமாய் கையாளப்படுகின்றன. 9-12-42ல் மில் மானேஜரை பேட்டி கண்டு தொழிலாளிகள் கோரிக்கைகளை சமர்ப்பித்ததற்கு பதில் ‘கெட் அவுட்’ தான். முதலாளிகளின் பணத்திமிருக்கு எல்லையே இல்லைபோலும். தொழிலாளிகள் என்ருல் வாயில் வந்தபடியெல்லாம் பேசலாம் என்று நினைக்கின்றனர் போலும்.

மேட்டூர் மில் தொழிலாளர் சங்கம் தொழிலாளர்களின் சார்பில் மில் நிர்வாகத்திற்கு அனுப்பிய நோட்டீசை வாபீஸ் பண்ணியதாகத் தெரிகிறது. அரசாங்கம் இவ்விஷயத்தில் தலையிட மறுத்திருக்கிறது. ஸ்தல அதிகாரிகளின் தர்பார் வலுத்து வருகின்றது. சங்கத்திலிருந்து எடுத்துப் போன புத்தகங்கள் ரிக்கார்டுகள் இன்னும் திருப்பிக் கொடுக்கப்படவில்லை. நாட்டிற்கு இன்று ஏற்பட்டுள்ள ஆபத்தான நிலைமையை அதிகார வர்க்கமும் மில் நிர்வாகமும் கொஞ்சமேனும் உணராமல் தொழிலாளர்களுக்கு ஆத்திரமூட்டும் செய்கைகளைச் செய்து வருகின்றனர்.

நாட்டின் நெருக்கடியை உத்தேசித்து தொழிலாளிகள் எவ்வளவோ பொறுமையுடன் இருந்து வருகின்றனர். ஆனல் இந்த உருட்டல் மிரட்டல்களுக்கும் ஒரு எல்லையுண்டு. நாட்டைப் பாதுகாக்கும் பணியின் அவசியத்தை முன்னிட்டே உற்பத்தியில் கேந்திர ஸ்தானத்திலிருக்கும் தொழிலாளிகளின் குறைகள் நீக்கப்பட்டாகவேண்டும். சமரச முறைகள் இவ்வாறு நிராகரிக்கப்பட்டால் இறுதியான வேலைநிறுத்த வழிக்கே முதலாளிகள் தொழிலாளிகளைத் தூண்டுகின்றனர். ஒன்றுபட்ட தொழிலாளர்களின் சக்திக்கு முன் எந்தத் திமிர்பிடித்த முதலாளியும் பணிந்தாகவேண்டும். வீவிங் மாஸ்டர் அட்டூழியத்திற்கு சங்கம்தான் பதில் சொல்ல முடியும். எல்லாத் தொழிலாளிகளும் உடனே சங்கத்தில் சேர்ந்து கோரிக்கைகளை அடையும் வழியில் உடனே ஆலோசித்து முன்னேறவேண்டும்.

## பஞ்சப்படி தினம்

### குண்டக்கல்லில் மகாநாடு

எம். எஸ். எம். ரயில்வேத் தொழிலாளர் சங்க மத்தியக்கமிட்டித் தீர்மானப்படி 20-12-42 ந் தேதி குண்டக்கல்லிலும், துரோணசலத்திலும் கிளைச்சங்கங்களின் சார்பில் பஞ்சப்படி தினத்தை அனுஷ்டித்து இரு மகாநாடுகள் நடத்தப்பட்டன. பல தொழிலாளர்கள் கூடியிருந்தனர். துரோணசலத்தில் நைஜாம் ஸ்டேட் ரயில்வேத் தொழிலாளிகளும் பங்கு எடுத்துக்கொண்டனர்.

பஞ்சப்படியைப் பற்றியும், ரேஷன் அலவன்ஸ் குறித்தும், குறைந்த விலைக்குத் தானியங்கள் விற்க ஸ்டோர்கள் ஏற்படுத்த வேண்டுவதைக் குறித்தும் பலர் பேசினர்கள்.

நைஜாம் சமஸ்தான ரயில்வேத் தொழிலாளர்கள் அவர்களது ஜீவாதாரமான உரிமைகளுக்குக் கிளர்ச்சி செய்த காரணத்திற்காக சமஸ்தான யதேச்சாதிகார சர்க்கார் அவர்களைக் கைது செய்ததைக் கண்டித்தும், தென்னிந்திய ரயில்வே யூனியனைச் சேர்ந்த தோழர் கல்யாணசுந்தரம் முதலியோரைக் கைது செய்ததைக்கண்டித்தும் அவர்களை உடனே விடுதலை செய்ய வேண்டுமெனக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

ரூ. 250க்குக் குறைவாகச் சம்பளம் வாங்குவோருக்கு ரூ. 20 பஞ்சப்படியும் இதற்குமேல் விலைவாசிப்புள்ளி 5-க்கு ரூ. 1-8-0 வீதம் அதிகமாகவும் கொடுக்கப்பட வேண்டுமென்றும், வேறு பல குறைகள் தீர்க்கப்பட வேண்டுமென்றும் கோரித் தீர்மானிக்கப்பட்டது.

## ஜி.ஐ.பி. தொழிலாளர் வேலைநிறுத்தம்

டிசம்பர் 11-ந் தேதி காலை 7–30 மணிக்கு பரேலிலுள்ள ஜி.ஐ.பி. ரயில்வே வர்க்ஷாப் தொழிலாளிகள் ஒவ்வொரு சமரச முயற்சியும் கையாளப்பட்டுப் பயனளிக்காமல் போன பின் வேலைநிறுத்தம் செய்தனர். காரணம், வேண்டிய உணவுத் தானியங்கள் கிடைக்காததே. அதோடு ரயில்வே நிர்வாகமோ அரசாங்கமோ தேவையான தானிய சப்ளைகளை ரயில்வே தானிய டிப்போவுக்கு அனுப்ப முயற்சியும் எடுக்கவில்லை. உடனே ரயில்வே நிர்வாகத்திற்கும் தொழிலாளர்களின் பிரதிநிதிகளுக்கும் சமரசப் பேச்சுகள் தொடங்கியது. நிர்வாகம் உடனே 100 மூட்டை கோதுமை சப்ளை செய்வதாயும், மத்தியானம் ஒருமணிக்குள் தொழிலாளர்கள் வேலைக்குத் திரும்பிவிட்டால் ½ நாள் சம்பளம் வெட்டாமல் கொடுப்பதாகவும், தொழிலாளரின் தேவைக்கான உணவுப்பொருள்கள் சரிவர சப்ளை செய்ய ஏற்பாடுகள் செய்வதாகவும் உறுதி கூறியது. “செங்கொடிக்கு ஜே! ஜி. ஐ. பி. ரயில்வேத் தொழிலாளர் சங்கத்திற்கு ஜே!” என்ற கோஷத்துடன் வேலைக்குத் திரும்பலாம் என்ற முடிவுக்கு 1300 கைகள் மேலெழுந்தன. இது ஒரு பெரும் வெற்றி. இந்த ஸ்டிரைக் முதலாளிகளுக்கும் அதிகாரவர்க்கத்திற்கும் ஒரு படிப்பினையாகவும் எச்சரிக்கையாகவும் இருந்தது.

டிசம்பர் முதல்வாரத்தில் ரயில்வே தானிய ஸ்டோரில் இருந்தது 90 மூட்டை கோதுமைதான். அரிசி கிடையாது கோதுமை இல்லை, வேறு தானியங்களும் அரிதாகி விட்டது.

டிசம்பர் 9-ந் தேதி சுமார் 1300 தொழிலாளிகள் கூடினர்கள். நிலைமையின் நெருக்கடியைப்பற்றி ஆலோசித்தார்கள். நிர்வாகத்தின் அசட்டையைக் கண்டித்தார்கள். வேலைநிறுத்தம் ஏற்படுமானல் உயிர்நாடியான யுத்தகால உற்பத்தி தடைப்படும். ஆகவே மறுநாள் மாலைக்குள் இந்த உணவு நெருக்கடியைத் தீர்க்க வேண்டுமென்று ரயில்வே நிர்வாகத்திற்கும், அரசாங்க அதிகாரிகளுக்கும் தந்தி மூலம் தெரிவிக்கப்பட்டது.

### பட்டினியுடன் பாடுபடுவதா ?

பயன் இல்லை. எப்படியாவது நிலைமையைச் சீர்படுத்தவேண்டி நம் தோழர்கள் உணவுக் கமிட்டி அதிகாரிகளைக் கண்டு பேசினர்கள். அதிகாரிகளோ கர்வம் பிடித்த பாஷையில் பேசினர்கள். உலை நெருப்பிலே பாடுபடும் தொழிலாளி பசி நெருப்பாலே துடிக்கக்கூடாது என்பது சிவப்பு நாடா உலகிலே வாழும் கோஷ்டிகளுக்கு எப்படித் தெரியும் !

பஞ்சாபிலே கோதுமை வாங்க ஆள் போயிருக்கிறது என்றெல்லாம் நிர்வாகம் சாக்குச்சொன்னது. உற்பத்திக்கு ஜீவன் போலுள்ள ரயில்வேத் தொழிலாளர்கள் விஷயத்தில் அதிகாரிகளும், ரயில்வே நிர்வாகமும் எத்தனை மோசமாக நடக்கிறது. இதுதான் பாசிஸத்தை எதிர்ப்பதற்குத் தொழிலாளர்களை உற்சாகமூட்டும் முறையா ! என்றனர் தொழிலாளிகள்.

தொழிலாளிகள், உற்பத்தியின் அவசியத்தையும் நாட்டுப் பாதுகாப்பின் முக்கியத்துவத்தையும் உணர்ந்தவர்கள். ஆகவே கடைசிவரையில் நிர்வாகம் நிலைமையுணர்ந்து நடவடிக்கைகள் ஏதாவது நடத்துமா என்று எதிர்ப்பார்த்தார்கள். ஆனல் ஒன்றும் நடைபெறவில்லை. கடைசிவரைக்கும் பொறுத்துப் பார்த்தார்கள். எல்லா முறைகளும் பயனில்லாமல் போகவே நிர்ப்பந்தத்தால் வேலைநிறுத்தத்தில் இறங்கினர்கள். அவர்களது கட்டுப்பாடும் ஒற்றுமையுமே வெற்றி கொடுத்தது. நிர்வாகத்தையும் அரசாங்கத்தையும் குலுக்கி எழுப்பியது,

## தூத்துக்குடி தோட்டித் தொழிலாளர் கிளர்ச்சி

தூத்துக்குடியிலுள்ள தோட்டித் தொழிலாளிகளுக்கு இப்போது மாதம் ரூ. 2-8-0 தான் பஞ்சப்படியாகக் கொடுக்கப்பட்டு வருகின்றது. விலைவாசிகள் விஷம்போல ஏறிவரும் இந்தச் சந்தர்ப்பத்தில் இது போதாது. குறைந்தபட்ச வாழ்க்கைச் சவுகரியங்களுக்கும் கூடக் கூலி போதாமல் அவர்கள் தவிக்கிருர்கள். 19–12–42 தேதி தூத்துக்குடி தோட்டித் தொழிலாளர் சங்கத்தின் பொதுக்கூட்டம் ஒன்று நடைபெற்றது. வாழ்க்கைச் செலவுகளுக்குத் தக்க மாதிரி பஞ்சப்படி கொடுக்க வேண்டும் என்று தீர்மானம் செய்தனர். நமது கம்யூனிஸ்டுத் தோழர்கள் வீடு வீடாகச்சென்று தொழிலாளர்களைச் சங்கத்தில் சேர்க்கத் திட்டம் போட்டிருக்கிருர்கள்.

## கரூர் மோட்டார் முதலாளிகள் சூழ்ச்சி

கரூரில் மோட்டார் தொழிலாளர் சங்கமொன்று இருக்கிறது. சங்கத்தில் தொழிலாளிகள் திரண்டு ஒன்று சேருவது முதலாளிகளுக்குப் பிடிக்குமா! முதலில் சங்கத்தில் முன்னணியில் இருந்து பாடுபட்ட தொழிலாளிகளை வேலையை விட்டு நீக்கினர்கள். இப்போது மாணிக்கம், கிருஷ்ணன் என்னும் இருவரை டிஸ்மிஸ் செய்திருக்கிருர்கள். இதோடு மட்டும் அவர்கள் நிற்கவில்லை. யு. எம். எஸ். மோட்டார் கம்பெனி மானேஜரே ஒரு போட்டிச் சங்கம் ஏற்படுத்தியிருக்கிருர். அதில் சேராத தொழிலாளிகளை வேலையிலிருந்து நீக்கி விடுவதாகப் பயமுறுத்தி வருகிருராம். தொழிலாளர் சங்கத்தையும் ஒற்றுமையையும் குலைக்க முயல்கின்ருர். டிஸ்மிஸ் ஆன தொழிலாளிகளைப் பற்றி ஜில்லா அதிகாரி தலையிடுவாரென்று லேபர் கமிஷனர் தெரிவித்திருக்கிருர். தொழிலாளர்களின் ஒற்றுமையும் ஸ்தாபன பலமும் தான் முதலாளிகளின் சூழ்ச்சிகளை முறியடிக்கும்.

## கரூர் நெசவுத் தொழிலாளர் சங்கம்

கரூரில் நெசவுத் தொழிலாளிகள் சுமார் 6000 பேர்கள் வரையிருக்கின்ருர்கள். யுத்தம் தொடங்கி இத்தனை நாட்களாகியும் சம்பள உயர்வோ பஞ்சப்படியோ எதுவும் அவர்களுக்குக் கிடைக்கவில்லை. இதைப்பற்றிச் சங்கம் முதலாளிகளுக்கும் ஜில்லா கலெக்டருக்கும் தெரியப்படுத்தியது பயனில்லை. சம்பள உயர்வுக்குப் பதில் சம்பளம் குறைக்கப்பட்டது. மேஸ்திரிகளின் அட்டூழியம் பொறுக்க முடியவில்லை. சங்கம் தொழிலாளர்களின் கோரிக்கைகளுக்காகப் போராடிவருகின்றது. ஸ்தாபன பலமும், ஒற்றுமையும், பொதுஜன ஆதரவுமே வெற்றிகொடுக்கும்.

யுத்த விமர்சனம்

[கே. ஆர்.]

# செஞ்சேனை முன்னேறுது பார்!

## எல்லாப்பகுதிகளிலும் ஜெர்மன் படைகள் பின்வாங்குகின்றன

போன மாதத்தில் ஹிட்லர் கர்வமாகக் கூறினன் "ஸ்டாலின்கிராடைப் பிடித்து விடுவோம்" என்று. ஆனல் அவனது திட்டம் தலைகுப்புறக் கவிழ்ந்து விட்டது. நாஜிகள் மாஸ்கோ நகரை தூரதிருஷ்டிக்கண்ணுடி மூலமே காண முடிந்தது. ஆனல் அவர்கள் ஸ்டாலின்கிராடின் உள்ளே அவர்களது நாசக் கால்களை வைத்தனர். ஆனல் ஸ்டாலின்கிராட் மக்களின் தசையாலும் இரத்தத்தாலும் கட்டப்பட்ட மனிதக் கோட்டையைப் பிளந்துகொண்டு செல்ல முடியவில்லை. சரித்திர மகத்துவம் வாய்ந்த சோவியத் மக்களின் வீர எதிர்ப்பு உலகத்தையே பிரமிக்கச் செய்திருக்கிறது. ஸ்டாலின்கிராட் இரும்பு நகரமாகவே திகழ்ந்து வெற்றிக் கொடியை நாட்டியிருக்கிறது. நாஜிகளின் சர்வ சக்தியும் திரண்ட தாக்குதலை எதிர்த்து மகத்தான தியாகங்களிடையே வெற்றிப்போர் விளைத்து வருகின்றனர் சோவியத் மக்கள்.

"இது பனிக்காலம், பனி நீங்கிய பின் புல் முளைக்கும். ஜெர்மனியர் மீண்டும் திரும்புவர்" என்று ஜெர்மன் மக்களை ஏமாற்றுவதற்காக கோயபல்ஸ் தம்பட்டமடித்துக் கொண்டிருக்கிறன். பனிக்காலம் தீர்ந்து புல் முளைக்கத்தான்போகிறது. ஆனல், அது நாஜிப்பிசாசுகளின் சமாதிகளின் மீது முளைக்கும் புல்லாகத்தான் இருக்கப்போகிறது.

### டான்முனையில் துவம்ச யுத்தம்

மத்திய டான் பிரதேசத்திலே பனி போர்வை போலச் சூழ்ந்து நிற்கிறது. பனியின் இடையிலே எதிரிகளை விரட்டியடிக்கிறது செஞ்சேனை. காலங் கடத்தாமல் தவக்கங்கள் இல்லாமல் முன்னேறிக் கொண்டு வருகின்றது. நாஜிப் படைகள் குழப்பமும் பீதியும்கொண்டு ஓடுகின்றன. செஞ்சேனை வளைத்து வளைத்து முறியடிக்கிறது ஜெர்மன் வெறியர்களை.

வடக்கே வெலிகி லூகி நகர பிரதேசத்தில் பல ஸ்தலங்கள் ரஷ்யர்வசம் அகப்பட்டன. தெற்கே வொரனேஷ்—ராஸ்டாவ் ரயில்பாதை துண்டிக்கப்பட்டு செஞ்சேனையின் கிடுக்கியில் நாஜிகள் பலியாகி வருகின்றுர்கள்.

மத்திய டான் பகுதியில் ஜெர்மானியரின் முகாம்களாயிருந்த பல கிராமங்கள் கைப்பற்றப்பட்டன. நாஜிகள் ஆயுதங்கள், உணவுப் பொருள்கள் தளவாடங்களையெல்லாம் விட்டு விட்டுத் தலை தப்பியது தம்பிரான் புண்ணியம் என்று ஓடுகின்றனர். வொரனேஷ் ராஸ்டாவ் பாதையில் மீட்கப்பட்ட கிராமங்களைக்கண்டால் ஒரே அழிவுக் காட்சிதான். இடிந்த சுவர்களும் சரிந்தகூரைகளும் தான். கிடைத்த இடமெல்லாம் யுத்த முகாமாக உபயோகித்துப் போராடி யிருக்கின்றனர் நாஜிகள்.

டான் பிரதேசத்தில் சென்ற பத்து நாட்களுக்கிடையில் மாத்திரம் 49,700 ஜெர்மன் சிப்பாய்கள் கைதிகளாகவும், ஆயிரக்கணக்கான துப்பாக்கிகள் குண்டுகள் சுமார் 64,000 குழல் துப்பாக்கிகளை செஞ்சேனை கைப்பற்றி யிருக்கிறது. உணவு ஸ்டோர்களும், லாரிகளும் இன்னும் பல சப்ளை ஸ்டோர்களையும் இழந்து விட்டுப் பின்வாங்குகின்றனர் ஜெர்மானியர். நால்சிக் முனையிலே சுமார் மூன்று லட்சம் வெடிகள் கைப்பற்றப்பட்டன. நால்சிக் போராட்டமும் ஸ்டாலின்கிராட் போராட்டத்துடன் இணைந்து பிணைந்து நிற்கிறது.

கருங்கடல் முனையிலே டுவாப்ஸேக்குக் கிழக்கே ருஷ்ய சேனை நாஜிகளைக் கிடுக்கியிலே மாட்டியிருக்கிறது.

### நாஜிகளின் பேய்த்தனம்

நாஜிகள் சாமான்யத்தில் தோற்ருேடவில்லை. ஹிட்லர் எங்கெங்கிருந்தோ ஆள் திரட்டி ஸ்டாலின்கிராட் முனைக்கு அனுப்புகிறன். அங்கே நாஜிகள் சவக்குழியைக் காண்கின்றுர்கள். ஹிட்லரால் பிடிக்கப்பட்ட சோவியத் யுக்ரேனிலே நாஜிகள் பேய்க் கூத்தாடியிருக்கிறுர்கள். லட்சக் கணக்கான மக்களைக் கொன்று குவித்திருக்கிறுர்கள். சிறுவர்கள் பெண்களையெல்லாம் சித்திரவதை செய்திருக்கின்றுர்கள்.

செஞ்சேனையால் இன்று யுக்ரேன் விமோசனமடைந்து வருகிறது. யுக்ரேன் மக்கள் சோவியத் புது வாழ்வின் சின்னமாகச் செஞ்சேனையை எதிர்நோக்கி வருகின்றுர்கள். சோவியத் யுக்ரேன் குடியரசின் 25வது ஆண்டு விழாவின்போது தோழர்ஸ்டாலின் உருக்கமான ஓர்செய்தி விடுத்தார்.

"யுக்ரேன் சோவியத்தின் கொடிக் கீழ் இருந்தது இன்னும் அதே கொடியின் நிழலில் வாழப் போகிறது. ஜெர்மனியின் பின்னணியிலிருந்து நமது விடுதலைப் போராட்டத்தை வளர்த்துவோம்."

### சோவியத் யுத்தசாகஸம்

சோவியத் தலைவர்களின் யுத்த சாகஸம் அபாரமானது. ஆரம்பத்தில் பிரதேசங்களைக் கைவிட நேர்ந்த காலத்தில் உறுதி குலையாமல் மக்களின் உணர்ச்சி குலையாமல் தலைமை தாங்கி நடத்தினுர்கள். மக்களின் தியாகமென்ற ஈட்டியைத் தீட்டி வைத்திருந்து எதிரிகளை எதிர்த்தார்கள். இப்போதோ திட்டப்படி எதிர்ப்பு. கணக்குப் போட்டு எதிர்த் தாக்குதல். காலத்திலோ, எதிர்ப்பின் வேகத்திலோ கலக்கமில்லை. எல்லா முனைகளிலும் ஒன்றுபட்ட எதிர்ப்பு என்பதே சோவியத் யுத்த சாகஸம், பொதுஜனயுத்த சாகஸம். ஹிட்லரின் மின்னல் தாக்குதல்கள் போன விடம் தெரியவில்லை. சோவியத் வீரர்களோ நாஜிகளைக் கிடுக்கிக்குள்ளே அழுத்திப்பிடித்துள்ளனர். அதோடு துவம்ச யுத்தம் நடத்துகின்றுர்கள்.

ஏகாதிபத்திய வாதிகள் ராணுவ ரீதியில் நடத்தும் போராட்டங்களுக்கும் சோவியத் நாட்டின் பொதுஜன யுத்த சாகஸத்திற்குமுள்ள வித்தியாசத்தை நன்கு காணலாம். வடக்கே லெனின்கிராடிலிருந்து தெற்கே காகஸஸ் வரை திட்டப்படி ஒன்றன் பின் ஒன்ருக் கிளம்பிய நாலு தாக்குதல்களும் இன்று தனிப்பட்டு நிற்கவில்லை. ஒரு போர் முனையோடு மற்ருெரு போர்முனை இணைந்து நிற்கிறது இப்பொழுது சோவியத் நிகழ்த்தும் இடைவிடாப் போராட்டத்திலே. நாஜி சைன்யங்கள் இதைச் சமாளிக்க முடியாமல் மூச்சுத்திணறி நிற்கின்றன.

### ஆறுகடக்கப் பாலம்

சோவியத் யுத்த முறையில் எத்தனையோ அதிசயமான எஞ்சினீரிங்வேலைகள். சோவியத் நிபுணர்கள் இந்த யுத்தத்தில் தங்கள் முழுத் திறமையையும் காட்டி உதவி செய்கின்றுர்கள்- முன்பொரு முறை மாயப் பாலத்தைப் பற்றி இந்தப் பகுதியில் எழுதியிருந்தோம். இப்போது சோவியத் எஞ்சினீயர்கள் செய்த வேலையொன்றைக் குறிப்பிடுகிறேம்:—

"ஒரு ஆறு. இன்னும் பனியாக உறைந்து விடவில்லை. மறு கரையிலே ஜெர்மன் பீரங்கிகளும் துப்பாக்கிகளும் குண்டுகளைக் கொப்பளிக்கின்றன. யுத்தத் தீ பொங்கி எரிகிறது. எப்படிக் கடப்பது? மறு கரைக்குப் போய் நாஜிகளை விரட்டியாக வேண்டும். சோவியத் எஞ்சினியர்களின் மூளை வேகமாக வேலை செய்தது. முப்பது மைல்கள் கடந்து ஆற்றின் மேல் புறத்திலே ஒரு அணை கட்டத் தொடங்கினுர்கள் வெகு சீக்கிரத்தில் கட்டி முடித்து தண்ணீரைத் தேக்கி விட்டார்கள், ராணுவம் ஆற்றைக் கடக்க வேண்டிய இடத்தில் ஓரடித் தண்ணீர்கூட இல்லை. சோவியத் வீரர்கள் ஆயுதங்கள் தளவாடங்கள் டாங்குகளுடன் கடந்தனர், நாஜிகளை விரட்டினர். அணைக் கதவுகளும் திறந்து விடப்பட்டன. இவ்வளவும் வெகு சிறிய காலத்தில்."

நாஜி சேனைகள் காகஸஸிற்குள்ளே போகும், எண்ணெய் வயல்கள் நம் கைக்குள்ளாகிவிடும், அங்கிருந்து ஈரான் வழிப் பாயலாம் என்று எண்ணிய ஹிட்லரின் திட்டம் மண் தின்று போய்விட்டது. செஞ்சேனையின் கிடுக்கியில் இன்று நாஜிகள் அகப்பட்டு அழிகின்றுர்கள். ஒவ்வொரு போர் முனையிலும் திட்டப்படி செஞ்சேனை முன்னேறி நாஜி சைன்யங்களை அழித்துத் தகர்த்து வருவதே இன்று காணும் காட்சி. ஸ்டாலின்கிராடில் ருமேனியப் படைகள் முறியடிக்கப்பட்டதால் ருமேனிய மக்களை ஏமாற்ற முடியாமல் அந்நாட்டு ராணுவத் தலைவர்கள், ஹிட்லரின் குலாம்கள் தவிக்கிருர்கள். அல்பேனியாவிலே தேசபக்தர்கள் கலகம் விளைத்து வருகின்றுர்கள்.

### சாம்ராஜ்ய ஆசையுடன் முடியாது

வட ஆப்பிரிக்கப் போர்முனையில் நேச நாடுகள் ரோமலைத் துரத்தி வருகின்றன. ஸிர்டி பாலைவனத்தை அடைந்துவிட்டன. ஆயினும் மத்தியதரைக்கடலில் பூரணமாக நேச நாடுகள் உலாவிவரவோ அச்சுநாடுகளின் பலத்தைக் குலைக்கவோ இது போதாது. இதாலிமீது படையெடுப்பது தான் தினசரி அவசரமான தேவையாகி வருகின்றது. ஸ்பெயினிலே பிராங்கோ உறுமுகிறன். டார்லான் கும்பலைக் கட்டியழும் பிற்போக்கான கோஷ்டிகளால் பிரெஞ்சுமக்களின் பூரண நம்பிக்கையும் ஆதரவையும் பெறமுடியுமா! சாம் ராஜ்யப் பித்தர்களால் அடிமை நாட்டுமக்களை உற்சாகப்படுத்த முடியுமா! வடஆப்பிரிக்கப்போர் வளர வளர இந்தப் பிரச்சினைகள் எல்லாம் முன்வரப்போகின்றன. பாசிஸத்தை முறியடிக்கும் மக்களின் சக்தியைத்திரட்ட ஏகாதிபத்திய நோக்கங்கள் பின்வாங்கியாகவேண்டும்.

கிழ்த்திசையிலோ அச்சுநாட்டுக் கூட்டாளியான ஜப்பான் சீனத்தில் கொடூரமான செயல்களைப் புரிந்து வருகிறது. கிழக்கு கியாங்ஸி மாகாணத்திலுள்ள லிங்கான் என்னும் பிரதேசத்திலே மாத்திரம் பதின்மூன்ருயிரம் சீன மக்களைப் படுகொலைசெய்திருக்கிறது. இந்தக் காட்டுமிராண்டிச் செயலைக்கண்டு பதறிக் கோபாவேசத்தால் சீனப் பாமர ஜனங்கள் 500 ஜப்பானியசிப்பாய்களை வெட்டி வீழ்த்தினர்.

பர்மா எல்லையிலே ராணுவத்தைத் திரட்டிவைத்த ஜப்பான் பூனன் மாகாணத்திலே பாய்ந்தது. ஆனல் ஜப்பான் நோக்கமெல்லாம் இன்று இந்தியாவின் மேல்தான். தளபதி வேவல் முடிவான வெற்றிக்குப் போய்க்கொண்டிருப்பதாக கூறுகிருர். ஆனல், இலங்கையிலிருக்கும் ராணுவத்தலைவர் அட்மிரல் லேடன் இலங்கைக்கும், கீழ்சமுத்திரக் கரைக்கும் எப்போதும் ஆக்கிரமிப்பு ஆபத்து ஏற்படலாம் என்று எச்சரிக்கை செய்கிருர். கடலிலே தூரமென்ருே சீதோஷ்ண நிலை என்ருே அசட்டையாயிருக்க முடியாது என்கிருர்.

### நாட்டைப் பாதுகாக்க தேசிய சர்க்கார்

கல்கத்தாவில் நான்கு முறை ஜப்பானிய விமானங்கள் குண்டுகளைப் பொழிந்திருக்கின்றன. சேதமோ எதிர்ப்போ ஒரு புறமிருக்க மக்களின் உறுதியும், பாசிஸ எதிர்ப்பு மனேபாவமுமே முக்கியமானது. கல்கத்தாவில் குண்டுவீச்சு என்ருல் தமிழ் நாடு கவலைகொள்ளாமலிருக்க முடியாது. இத்தகைய நிலைமையில் உணவுப் பிரச்சினையைத்தீர்த்து அரசியல் நெருக்கடியைத் தவிர்த்தாகவேண்டும். இன்றைய நிலைமையில் அதிகாரவர்க்கம் பழைய இறுமாப்புடன் பேசிக்கொண்டு காலந்தள்ளலாம். ஆனல் ஆக்கிரமிப்பு பயங்கரம் அருகில் வந்து விட்ட நாம் சும்மா உட்கார்ந்துகொண்டு எதிரி நாட்டிற்குள் வரும் நிலைமையை அனுமதித்துக்கொண்டிருக்க முடியாது. தேசப் பாதுகாப்புக்காக—தேசீய ஒற்றுமையின் மூலம் தேசிய சர்க்காரை நாம் இன்றே பெறவேண்டும். தேசத் தலைவர்களை மீட்டாகவேண்டும். இல்லையேல் நாட்டுக்குப் பேராபத்து. ஸ்டாலின்கிராட் ஒரு நகரம் ஹிட்லரின் முழு ராணுவத்தையும் தன்னந்தனியே நின்று தகர்த்திருக்கிறது. சோவியத் நாட்டில் வஜ்ரம் போன்ற சக்திவாய்ந்த பொதுமக்களின் ஆதரவு அரசாங்கத்திற்கு இருப்பதே இதற்கு முக்கிய காரணம். நமது 40 கோடி மக்களின் மகத்தான சக்தியைத் திரட்டும் தேசீய சர்க்கார் இங்கும் பாசிஸத்தை முறியடிக்க முடியும். நாட்டைக் காக்க தேசிய சர்க்காரைப் பெற நாம் முந்திக்கொள்ளவேண்டும்.

---

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

பிரசாரத்தின் விசேஷத்தை நாம் நன்கு தெரிந்துகொள்ளவேண்டும்.

தேசிய ஒற்றுமையின் மூலமாகவே, இன்று நாட்டில் ஏற்பட்டுள்ள நெருக்கடியைத் தீர்க்க முடியும் என்ற உணர்ச்சி எல்லாக் கட்சிகளுக்கும் ஏற்பட்டு வருகிறது. சுய நிர்ணய உரிமையை அங்கீகரித்து, இன்று தேசத்தில் ஒற்றுமையை ஏற்படுத்துவதுதான் சரியான முறை என்ற உணர்ச்சி இன்று தேசபக்தி உள்ள ஒவ்வொரு அரசியல் வாதிக்கும் இன்று ஏற்பட்டிருக்கிறது. அலகாபாத்தில் சமீபத்தில் நடந்த சர்வ கட்சி மகா நாட்டின் விவாதம் இந்தப் போக்கிலேயே இருந்ததாக அறிகிருேம். ஹிந்து மகா சபையின் ஒரு விசேஷமான பகுதியும் கூட, இதை ஏற்றுக்கொள்ளத் தயாராயிருந்ததாக அறிகிருேம்.

### ஒற்றுமையைச்சீர்குலைக்கும் முயற்சி

இவ்வாறு வளர்ந்துவரும் ஒற்றுமையைக் கண்டு லின்லித்கோ பிரபுவிற்கு 'பாகிஸ்தான்' பிரசாரத்திற்கு இதுவரையில் தூபம்போட்டுவந்த லின்லித்கோவிற்கு கிலிபிடித்திருக்கிறது. அதனுற்ருன், இந்தியாவின் "பூகோள ஒற்றுமை"யில், இன்று அபாரமான சிரத்தை ஏற்பட்டிருக்கிறது. ராஜாஜீயும், சியாமப் பிரசாத் முகர்ஜியும், காந்திஜீயைச் சந்திக்க அனுமதி மறுத்து, ஒற்றுமைக்காக நடக்கும் முயற்சிகளுக்கெல்லாம் உலை வைத்த வைசிராய், இன்று ஒற்றுமையைப்பற்றி வாய்கூசாமல் பேசுகிருர். ஒற்றுமையைச் சீர்குலைக்கும் முயற்சியின் தொடர்ச்சியே, இந்த "அகண்ட ஹிந்துஸ்தான்" பிரசாரமாகும்.

### ஜனங்கள் அளிக்கவேண்டிய பதில்

இந்த மாயவலையில் சிக்காமல், ஒற்றுமைப் பாதையில் முன்னேறுவதுதான், நேர்மையுள்ள ஒவ்வொரு தேசபக்தனின் கடமையாகும். நிலைமை, நாளுக்கு நாள் மோசமாய்க்கொண்டிருக்கிறது. அதே சமயத்தில் மகத்தான சந்தர்ப்பமும் நமக்குக் கிடைத்துள்ளது. அதிகாரவர்க்கத்தின் முட்டுக்கட்டைகளைத் தகர்த்தெறிந்து, அதனுடைய மாய்மாலங்களைக் கண்டு மயங்காது, இன்று உடனடியாக தேசிய ஒற்றுமையை ஏற்படுத்துவதுதான், வைசிராய்க்கு இந்திய மக்கள் அளிக்கவேண்டிய பதிலாகும்.

---

## அதிகாரவர்க்கத்தின் அசட்டை பாதுகாப்புக்குத் தடை

பாசிஸ்டு ஆக்ரமிப்பைத் தகர்த்தெறிய நாம் எல்லோரும் ஆர்வத்துடன் ஒன்றுபடவேண்டும். இதற்கென மக்களின் நியாயமான கோரிக்கைகளையும் உரிமைகளையும் அளித்து அரசாங்கம் மக்கள் உற்சாகத்துடன் ஜப்பானை எதிர்க்கும் நிலைமையை மேலும் மேலும் சிருஷ்டிக்க வேண்டும்.

அப்படிருக்க, சேலம் ஜில்லா ஓமலூர் தாலுக்காவிலுள்ள ஆலமரத்துப்பட்டி விவசாயத் தொழிலாளர் சங்கத்திற்கு வழங்கப்பட்டுள்ள மரியாதை நாட்டுப் பாதுகாப்பில் கவலைகொண்ட வேலையாகத் தெரியவில்லை. மேற்படி சங்கத்தின் சார்பில் அந்தப் பகுதியிலுள்ள ஏழைக் குடியானவர்களின் கஷ்டங்களை எடுத்துக்காட்டி அதிகாரிகளுக்குப் பல மனுக்கள் அனுப்பப்பட்டிருந்தன. 3-12-42-ந் தேதி சங்கத் தலைவரையும் காரியதரிசியையும் பன்னவாடியில் முகாம் போட்டிருந்த மேட்டூர் டிப்டி தாசில்தார் கூப்பிட்டிருந்தார். காலையிலிருந்து காத்திருந்தும் இரவுசுமார் 10 மணிக்குத்தான் பேட்டியளிக்கப்பட்டது. ஆனல் கோரிக்கைகளைப்பற்றி விசாரிப்பதற்கு மாருக சங்கத்தைக் கலைத்து விடுங்கள் என்று தாசில்தாராலும் ரெவின்யூ இன்ஸ்பெக்டராலும் உபதேசம் செய்யப்பட்டதென்று அறிகிருேம்.

சங்கத்தில் சேருவது விவசாயிகளின் சாதாரண உரிமை. அதைச் சரிவர நடத்திச் செல்லுவது அவர்களது கடமை. சங்கமேகூடாது என்று அதிகாரிகள் தடுக்கக் கூடாது, தடுக்கமுடியாது. விவசாயிகள் தங்கள் சங்கங்கள் மூலம் ஒழுங்கும் ஒற்றுமையும் கொண்டமுறையில் அனுப்பும் கோரிக்கைகளை பொறுப்புள்ள அரசாங்க அதிகாரிகள் கவனித்தே தீரவேண்டும். ஆங்காங்குள்ள பணமூட்டைகளையோ உள்ளூர் அதிகாரிகளையோ தான் நம்புவது; விவசாய சங்கங்களை நிராகரிப்பது என்ற முறை கைவிடப்படவேண்டும். ஆறத்தீரவிசாரித்து ஏழை விவசாயிகளின் குறைகள் ஒவ்வொரு இடத்திலும் அரசாங்கத்தால் நீக்கப்பீடவேண்டும். நாட்டுப் பாதுகாப்புக்கு, உற்பத்தி அதிகரிப்புக்கு, இது உடனடியான இன்றியமையாத வேலை.

# அச்சுநாடுகளின் தோல்வி யாருக்கு உதவி?

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

காமல் அவர்கள் நழுவக் காரணமென்ன! நேசநாட்டுப் படைகள் படையெடுத்தவுடன் ஏககாலத்தில் ஐரோப்பாவிலே பொதுஜனப் புரட்சிகள் கிளம்பும் என்ற பயத்தினல்தான். இந்தப் புரட்சி எழுச்சிகளால் ஹிட்லரின் ராஜ்யம் சீக்கிரத்திலே சிதைந்து போகுமல்லவா! ஆம்! ஆனல் அதோடு ஐரோப்பிய நாடுகளிலே ஜனங்களின் சர்க்கார்கள் தோன்றிவிடுமே. ஏகாதிபத்திய வாதிகள் தங்களது குலாம்களை வைத்து பொம்மை சர்க்கார்கள் நிறுவ முடியாதே. ஐரோப்பா ஹிட்லரிடமிருந்து நேராக ஐரோப்பிய ஜனங்கள் கையில் போவது அவர்களுக்கு இஷ்டமில்லை. அவர்களது ஏஜெண்டுகளின் கைகளிலே போக வேண்டுமென்றுதான் ஆசை.

இரண்டாம் போர்முனைமுடியாது என்று கூறப்படும் வாதங்கள் ராணுவ சம்பந்தமானவைகளல்ல, அரசியல் காரணங்கள் கொண்டவைகளே. ஜனங்களைக் கண்டு அச்சம், ஏகாதிபத்தியப் பேராசை இவைதான் இரண்டாம் போர்முனையை எதிர்க்கும் ராஜீய வாதங்கள். ஆனல் இவ்வாறு கூறிக்கொண்டு தப்பிவிடமுடியாது. அவர்களைப் பொதுஜனக் கிளர்ச்சி நெருக்கி வருகின்றது. நிர்ப்பந்தம் தாங்காமல் தான் வட ஆப்பிரிக்காவிலே தாக்குதலை ஆரம்பத்திருக்கிறார்கள். இனி மேலும் அவர்கள் தற்காப்புத் தந்திரத்துடன் நிற்க முடியாது; அசையாமலிருக்க முடியாது.

## ஐந்தாவது தோல்வி

அவர்களது இந்த லட்சியம் ஆப்பிரிக்கப் போரால் நிறைவேறி விடுமா! இல்லை!

அவர்கள் எதிர்த்தாக்குதலை ஆரம்பிக்கிறார்கள். ரோமல் படைகளை அழிக்கிறார்கள். மீதியுள்ள முஸோலினியின் படைகளையும் ஒழிக்கிறார்கள். இதனல் எல்லோருக்கும் நன்மைதான். இஸ்லாம் மக்களுக்கும், இந்தியாவுக்கும் நன்மைதான். இது ராணுவப் பகுதியளவில் சரி.

ராஜீயத்துறையில் பார்த்தாலோ: விச்சி சர்க்காரைக் கைக்குள்போட்டுக்கொள்ளுவது, அதை வடஆப்பிரிக்காவுக்கு வரச் சொல்லுவது, அதன் மூலம் காலனியிலுள்ள மக்களின்சுதந்திரத்தைக்கொடுக்காமல் நழுவிவிடுவது, என்ற திட்டம் போட்டிருந்தனர். விச்சி துரோகிகளை பிரெஞ்சு சாம்ராஜ்ய சர்க்காராக ஆக்குவது, வடஆப்பிரிக்காவிலுள்ள அடிமை நாடுகளின்மேல் சுமத்துவது; இதுதான் டார்லான் ஒப்பந்தத்தின்பின் இருந்த சூழ்ச்சி. ஆனல் இதுவும் குழப்பத்தில் குலைந்தது.

விச்சித்துரோகிகள் ஒரு முடிவுக்கும் வர முடியவில்லை. டார்லான் வந்தான்: ஆனல் பிடேன் வரவில்லை. இந்தக் குழப்பம் தான் பிரெஞ்சு கப்பற்படையையும் பாதித்தது. அது தப்பமுடியாமல் ஒரு பகுதி தன்னையே கடலில் மூழ்கடித்துக் கொண்டது. விச்சி துரோகிகள் போயிருந்த போக்கில் தேசபக்தர்கள் என்று அவர்கள் பெயர் சூட்டிக்கொண்டு எவ்வாறு முன்வர முடியும்!

டார்லான் ஒப்பந்தத்தைப்பற்றி 'சுதந்திர பிரெஞ்சுக்காரர்களும்' அமெரிக்க—பிரிட்டிஷ் மக்களும் பெருங்கிளர்ச்சி செய்து கண்டனம் முழக்கினர். பிரிட்டிஷ் அமெரிக்க சர்க்கார்கள் தங்கள் குரலைத் தாழ்த்தவேண்டி இருந்தது. அமெரிக்க தளபதியான இஸன்ஹவர் இது அவசர ராணுவ அவசியத்திற்காகச் செய்துகொண்ட யுத்தகால ஒப்பந்தம் தான் என்று சொல்லவேண்டி வந்தது. இங்கிலாந்திலோ இதுசம்பந்தமாய் காமன்ஸ் சபையின் இரகசியக் கூட்டம் நடத்த நேரிட்டது. பிரெஞ்சு சாம்ராஜ்யத்தின் தலைவன்நான்தான் என்று தன்னைத் தானே தம்பட்டமடித்துக்கொண்ட டார்லான் பிரகடனத்தை வாபஸ் வாங்கினன்.

டார்லான் சம்பவம் காலனி மக்களின் பிரச்சினையை முக்கியமான பிரச்சினையாகக் கிளப்பி இருக்கிறது. பிரிட்டிஷ் மக்களிடமும் அமெரிக்க மக்களிடமும் கிடைத்த சூட்டுக்குப் பிறகு அவ்வரசாங்கங்கள் இனிமேல் இத்தகைய செயல்களில் இறங்குவது ஆபத்தானது என்று தயங்குவது நிச்சயம். இக்கிளர்ச்சியின் படிப்பினை என்ன! ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் பொங்கி எழுந்துள்ள பொதுஜனக் கிளர்ச்சி இந்த அரசாங்கங்களை நிர்ப்பந்தப்படுத்திக் காலனிகளை விடுதலை செய்யுமளவிற்குப்பலம் பெறவில்லை. ஆயினும் மறுபடியும் சாம்ராஜ்யங்களை நிலைநாட்டுவதற்காக உயிரை இழக்கத் தயாராயில்லை என்று எச்சரிக்கும் அளவுக்கு ராஜீய உணர்ச்சி அவர்களிடையே ஏற்பட்டிருக்கிறது. இந்தியாவில் வைஸ்ராயின் பதவி நீடிக்கப்பட்டிருக்கிறது. ஆனல் இந்த முறையில் இந்திய நிலைமையை சமாளித்துவிட முடியாது. இந்திய மக்களைத் திரட்டாமல் இப்பொழுதுள்ள நிலைமையை நீடிக்கும் இம்முயற்சி, பிரிட்டிஷ் அதிகாரவர்க்கத்தின் பலஹீனத்தையும் குழப்பத்தையும் காட்டுகிறது. அம்மாதிரியேதான் டார்லான் விஷயத்திலும் அமெரிக்க சர்க்காரின் சங்கடம். டார்லான் போன்ற பிற்போக்குச் சின்னங்கள், இருக்கும் வரையில் யுத்தத்தில் வெற்றி வரப்போவதில்லை, காலனியிலுள்ள மக்களின் ஒத்துழைப்பைப் பெறப்போவதில்லை, ஒவ்வொருவருக்கும் தங்கள் தங்கள் லட்சியம் நியாயமானதென்ற எண்ணம் எவ்வாறு ஏற்படுத்த முடியும்? ஹிட்லரை ஒழிப்பதற்கு வேண்டிய அளவிற்கு மக்களைத் திரட்ட இக்கும்பல்கள் ஒழியவேண்டும். வட ஆப்பிரிக்கத் தாக்குதல், காலனிகள் பிரச்சினையின் முக்கியத்துவத்தை அமெரிக்க-பிரிட்டிஷ் மக்களின் மனதில் பதிய வைத்துவிட்டன. அமெரிக்க—பிரிட்டிஷ் அரசாங்கங்கள் விரும்பியவாறு சூழ்ச்சி செய்வதற்கிடமில்லை.

## இரண்டாம் போர்முனைக்குப் பூர்வாங்கம்

வட ஆப்பிரிக்கத் தாக்குதலால் ஏற்பட்ட விளைவு இது ஒன்றுமட்டுமல்ல. இரண்டாம் போர்முனை என்று பறைசாற்றுவதற்காகச் செய்த முயற்சியே இது. ஆனல் ஏகாதிபத்திய பிற்போக்காளர்கள் என்ன சாமர்த்தியமாக திட்டம்போட்டாலும் இது இரண்டாம்போர்முனையின்பூர்வாங்கமாக அமையும், ஐரோப்பாவில் நிலப்படையெடுப்புக்குக் கொண்டுபோகும் என்பதில் சந்தேகமில்லை.

ஸார்டினியாவையும், ஸிசிலியையும் கைப்பற்ருவிடில் வட ஆப்பிரிக்க அரங்கத்தின் பிரயோஜனம்தான் என்ன! அப்பொழுதுதான் மத்தியதரைக் கடலை நேசதேசங்கள் உபயோகிக்கமுடியும். இது பிரான்ஸுக்குப் பதில் இதாலியில் இரண்டாம் போர்முனையை நிச்சயமாக ஏற்படுத்தும்.

இரண்டாம் போர்முனையை ஏற்படுத்த அஞ்சுகிறார்கள் ஏகாதிபத்தியவாதிகள். ஆனல் மக்களின் சக்தி அவர்களை இரண்டாம் போர்முனைக்குத் தும்பு கட்டி இழுத்துச் செல்லுகிறது.

## நம்மைப் பொறுத்தவரையில்

உலக ரீதியில் என்ன நடக்கிறது, இதனல் இந்தியாவிலுள்ள நமக்கு என்ன பிரயோஜனம் என்பதைக் கவனிப்போம்.

(1) நேசதேசங்களின் சமீபகால வெற்றிகள் பிரதானமாக சோவியத்தின் வெற்றிகளே. 18 மாதங்களாக உலகம் பிரமிக்குமாறு சோவியத் மக்கள் வீரப்போர் நடத்தி வந்திருக்கின்றனர். இறுதியில் ஸ்டாலின்கிராடின் சரித்திர மகத்துவம் வாய்ந்த எதிர்ப்பு அச்சு நாடுகளை எதிர்த்துத் தாக்குவதற்கு சந்தர்ப்பத்தைக் கொடுத்தது. செஞ்சேனை உலகத்தை பாசிஸ அடிமை ஆட்சியிலிருந்து காப்பாற்றி யிருக்கிறது. அதன் வெற்றி பாசிஸ சேனைகளைத் துவம்சம் செய்யவும் உலக மக்கள் விடுதலை அடையவும் வழிகாட்டியிருக்கிறது, ஜனங்களின் முகாமில் தலைமையை மேலும் மேலும் சோவியத் மக்கள் வகிக்கின்றனர். செஞ்சேனையின் வீரப்போர் சரித்திரத்தை சிருஷ்டித்து வருகின்றது, உலகப் போக்கின் வேகத்தை நிர்ணயித்து வருகின்றது.

(2) பாசிஸ்டு ஆக்கிரமிப்பாளர்களின் உலக ஆதிக்கத் திட்டங்கள் சோவியத் மண்ணிலே குழிதோண்டிப் புதைக்கப்பட்டுப் போயின. அவர்கள் தோற்கடிக்கப்பட்டார்கள். இப்போது முறியடிக்கப்பட்டு வருகின்றனர்.

(3) பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகளின் ராணுவ-ராஜீய தந்திரங்கள் தகர்ந்து வருகின்றன. அவர்கள் பிடிவாத கோபுரத்திலேயே உட்கார்ந்திருக்க நினைத்தார்கள். முடியவில்லை.

சோவியத் வெற்றிகளின் காரணமாக இந்திய மக்களுக்குக் கிடைத்த லாபமென்ன? ஏதோ இதுவரையில் பாசிஸ்டு அடிமைத்தனத்திற்கு ஆளாகாமலிருந்தோம் என்பது மாத்திரமல்ல. குறிப்பாக இந்த வெற்றி நமது தலைவிதியை நிர்ணயித்துக்கொள்வதற்கான அவகாசத்தை அளித்திருக்கிறது.

## காலத்தை உபயோகிப்போம்

மாஸ்கோ வாயிலில் கடந்த பனிக்காலத்திலே கிடைத்தவெற்றி நமக்குக் காலமளித்தது. கிரிப்ஸ் தூது ஏகாதிபத்தியவாதிகள் புதியதொரு சூழ்ச்சியைக் கையாளுகிறார்கள் என்பதையே எடுத்துக் காட்டியது. காங்கிரஸ்—லீக் ஒப்பந்தத்துடன் தேசிய பாதுகாப்புக்காக தேசிய சர்க்கார் கோரிக்கையோடு கிரிப்ஸ் முயற்சியை முறியடித்து நாம் வெற்றி பெற்றிருக்கலாம். அதற்குப் பதிலாக "இந்தியர்களுக்குள் ஒற்றுமை கிடையாது. ஆகவே இந்தியப் பாதுகாப்புக்கு இவர்களை நம்ப முடியாது" என்ற பல்லவியுடன் அவரைப் போகவிட்டோம். இது பச்சைப் புளுகு தான். ஆனல் உலக மக்களிடம், நமது சர்வ தேசத் தொடர்புகளிடம், ஏகாதிபத்திய ஆட்சிக் கூட்டம் சென்று உண்மையை மறைத்துப் பொய்ப் பிரசாரம் செய்வதற்கு நமது ஒற்றுமையின்மை இடமளித்துவிட்டது.

மீண்டும் கிடைத்த அவகாசத்தை நாம் உபயோகிக்கத் தவறினேம்; ஏகாதிபத்திய வாதிகள் பயன்படுத்திக் கொண்டனர். நம்மைத் தாக்கும் அபாண்டமான பொய்ப் பிரசாரத்திலே இறங்கினர். நமது தேசிய இயக்கம் பாசிஸ்டு ஆதரவு மனப்பான்மை கொண்டது என்று அவதூறு பரப்பினர். இதன்மூலம் தேசிய இயக்கத்தை ஒரு 'போராட்டத்திற்கு'த் தூண்டிவிட்டு விட்டு உலகமக்களிடம் சென்று "இதோ பாருங்கள் இந்திய தேச பக்தர்களின் நாசவேலையைப்பாருங்கள்; பாசிஸ்டு ஆக்கிரமிப்பை எதிர்க்க இவர்களை எவ்வாறு நம்ப முடியும்!" என்று இந்தியப் பிரச்சினையைத் தட்டிக்கழிக்கப் பார்த்தனர்.

இந்த சமயத்தை நாம் நமது தேச மக்களைத்தட்டி எழுப்புவதற்காக உபயோகிக்கவில்லை. காங்கிரஸ் லீக் ஒற்றுமையை ஸ்தாபித்து பிடிவாதமாய்க் குந்தியிருக்கும் ஏகாதிபத்தியத்தின் கைகளிலிருந்து தேசிய சர்க்காரைப் பெறுவதற்கு இந்த சந்தர்ப்பத்தை நாம் உபயோகிக்கவில்லை. தேசப் பாதுகாப்புக்காக தேசிய ஒற்றுமை முன்னணியை நாம் சிருஷ்டிக்கவில்லை. இதனல் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வாதிகள் நமது மக்களுக்கு எதிராக ஒரு போர் முனையை ஆரம்பித்துவிட்டார்கள். நாமோ இரண்டு நெருப்புகளிடையே இருக்கிறோம் — ஜப்பானிய ஆக்கிரமிப்பு பயங்கரம் ஒருபுறம், ஏகாதிபத்திய அடக்குமுறையின் உண்மை சொரூபம் மற்றொருபுறம். இந்த நிலைமையைப் பற்றி, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் கவலை கொள்ளாம லிருக்கலாம், ஆனல் நாம் சும்மா இருக்க முடியுமா!

## ஒன்றுபட்டால் விடுதலை

ஸ்டாலின்கிராடிலே பெற்ற வெற்றி மூலம்-வீர எதிர்த் தாக்குதலின்மூலம் சோவியத் யூனியன் நமக்கு இன்னும் சமயங் கொடுத்திருக்கிறது. இந்தியாவுக்கோ ஆக்கிரமிப்பு அபாயம் இருக்கத்தான் செய்கிறது. ஜப்பானியர்கள் இன்னும் தோற்கடிக்கப்படவில்லை. சோவியத்தின் வெற்றியையும் ஹிட்லரின்தோல்வியையும்கண்டு சற்று பின்தங்கியிருக்கிறார்கள்; அவ்வளவு தான். நமதுநாடு உலகத்திலேயே எல்லோரும் அடைய விரும்பும் களஞ்சியமல்லவா! பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் இக் காரணங் கொண்டுதான் நமது சுதந்திரத்தை மறுக்கிறது: இதே காரணத்திற்காக ஜப்பானிய ஏகாதிபத்திய வெறியர்களும் நம்மைத் தாக்குவார்கள். அந்நிய யதேச்சாதிகாரத்தின் கையில் நமது பாதுகாப்பு இருக்கும் வரை நமக்கு ஆபத்துத்தான்.

நமது கடமை சும்மா பார்த்துக் கொண்டு நிற்பதல்ல. நாம் நமது வேலையைச் செய்தாக வேண்டும். எல்லாக் கட்சிகளையும் ஒற்றுமைப்படுத்தி நாட்டை நாமே அடைந்தாக வேண்டும். சும்மா உட்கார்ந்திருப்பது, ஜப்பானிய ஆக்கிரமிப்பு அபாயத்தை மறுப்பதாகும்; ஏகாதிபத்தியப் பிற்போக்கின் சண்டித்தனத்தை நாமும் ஒப்புக் கொள்ளுவதாகும். நாம் பின்வாங்கி அசிரத்தையாயிருப்பதைவிட தேசத்துரோகம் இன்று வேறில்லை. அவ்வாறிருப்பது நமது மக்களின் வாழ்வைப் பாழ்படுத்தும் நிலைமையைத் தவிர்க்க நம்மாலியலாது என்று தவிப்பதற்கொப்பாகும். இன்று காங்கிரஸ் லீக் ஒற்றுமைக்காகப் பாடுபடுவது தேசிய ஒற்றுமையை வளர்க்கும் செய்கை. தேசிய ஒற்றுமைதான் தேசிய சர்க்காருக்கு அழைத்துச் செல்லும், வெற்றிகரமாக தேசப் பாதுகாப்பை நிறுவ வழி காட்டும்.

சர்வ தேசிய ரீதியாகவும் அலைபுரண்டு விட்டது-

-பாசிஸ ஆக்கிரமிப்பாளர்களிடமிருந்து லகான் நழுவி விட்டது.

-ஏகாதிபத்தியத்தின் கொள்கைகளோ மேலும்மேலும் நிலைமையைச் சமாளிக்கக் கொஞ்சமேனும் திறமையற்றவை என்று நிரூபிக்கப்பட்டுவிட்டது.

-பொதுஜன சக்தியும் பொதுஜன விழிப்பும் வளர்ந்து வருகிறது.

—சோவியத் நாடு லகானை மேலும் மேலும் கைப்பற்றி வருகின்றது.

நமது பக்கம்தான் வெற்றி யடைந்து வருகிறது. தேசிய ரீதியிலும் அலைபுரளச் செய்ய நமக்குக் காலம் கிடைத்திருக்கிறது. நாம் இன்று ஒன்றுபட்டால் விடுதலை நிச்சயம்.

# கேரளத்தைப் பார்!

## சிறுவர்களின் தேசபக்தி

"இந்தப் பசங்கள் பண்ற ஆர்பாட்டத்தைப் பாரு! இவர்கள் பாட்டுக் கேட்காத இடமில்லை. இவர்கள் தான் நம் நாட்டின் வருங்காலத்தை நிர்மாணிப்பவர்கள்" என்று சிரக்கல் தாலூகாவிலே (மலையாளத்தில்) ஒரு விவசாயிக் கிழவர் அதிசயமும் ஆர்வமும் ததும்பக் கூறினராம். ஆம் கிழவர் வார்த்தைகள் முற்றிலும் உண்மை. இந்திய ராஜீய வாழ்விலே இன்று சிறுவர்களுக்கும் ஒரு முக்கிய ஸ்தானம் இருக்கிறது. முன்பு தேர்தல்காலங்களிலே 'மஞ்சள் பெட்டிக்கு ஜே!' போட்டு மகத்தான சேவைசெய்தது சிறுவர்கள்தான்.

அடிமை நாட்டிலே அவர்கள் திறமை எல்லாம் மங்கி மக்கிப்போகிறது. அவர்களது இளம் நெஞ்சிலே கட்டும் சுந்தரக் கோட்டைகளை யெல்லாம் இன்றுள்ள சமூக அமைப்புத் தகர்த் தெறிந்துவிடுகின்றது. சின்னஞ்சிறு வயதிலேயே அவர்கள் வாழ்க்கைப் போராட்டத்தின் தொல்லைகளுக்கு ஆளாகியிருக்கின்றனர். துள்ளித்திரிய வேண்டிய காலத்திலே இல்லையென்ற கொடுமை வாட்டுகின்றது. யுத்தத்தின் காரணமாக விலைவாசி உயர்வு சிறுவர் வாழ்க்கையைப் பெரிதும் பாதித்திருக்கிறது. ஏழைக் குடும்பங்களிலுள்ள சிறுவருக்குப் பள்ளிப்படிப்புக்கு இடமில்லை. பச்சிளம் பாலருட்பட முழுக் குடும்பமும் அதிகாலை முதல் அந்தியிருட்டு வரை பாடுபட்டுழைத்தால்தான் அடுப்பிலே பூனை தூங்காமல் அரைக் கஞ்சியாவது கிடைக்கும்.

## பாலர்களின் பாசிஸ எதிர்ப்பு

ஆகவே இன்று சிறுவர்களிடையே புதிய உத்வேகம் ஏற்பட்டிருக்கின்றது. பல விடங்களில் அவர்கள் மகாநாடுகள் நடத்தியிருக்கிறார்கள். கவலையற்று வாழ வேண்டிய அவர்களது பிஞ்சுப் பருவத்திலேயே கவலைகள் சூழ்ந்துள்ள காலமிது. உணவுப்பஞ்சம், ஆக்கிரமிப்பு பீதி இவையெல்லாம் அவர்களை அலைத்து வருகின்றன. கே. பி. ஆர். கோபாலன் பிறந்த நாட்டில் சிறுவர்களுடைய தீரத்துக்குக் குறைவில்லை. கிராமங்கள் தோறும் அவர்கள் ஊர்வலங்கள் நடத்துகிறார்கள். ஜாப் விரோதப் பாடல்களை கோஷிக்கிறார்கள். தேசத்தலைவர்களை விடுதலை செய்யவேண்டும், தேசிய சர்க்கார்வேண்டும், அதற்கான ஒத்றுமை இயக்கத்தில் சேரவாருங்கள் என்று முழங்குகிறார்கள்.

வயல் புறங்களிலே வேலை செய்யும் விவசாயிகளுக்கும் சிறுவர்களின் பிரசார வேலை பெருத்த உற்சாகத்தை யளிக்கிறது. நாச வேலைக்காரர்கள் ஆசைகள் காட்டிச் சிறுவர்களை இழுக்கப்பார்த்தார்கள். ஆனல் முடியவில்லை.

மொக்கேரி என்னும் கிராமத்திலே பலமான பால சமாஜம் இருக்கிறது. அதைத் தகர்க்க அங்குள்ள பள்ளிக்கூட உபாத்தியாயர் சூழ்ச்சி செய்தார். அவர் சிறுவர்களை மிரட்டினர்; வீடுகளிலே போய் இல்லாதும் பொல்லாதும் கூறினர். பள்ளிக்கூடத்தைவிட்டு விலக்குவதாகப் பயமுறுத்தினர். சிறுவர்கள் அஞ்சவில்லை. அவர்கள் நடத்திய பாலர் மகாநாட்டில் இந்த உபாத்தியாயரைக் கண்டித்துத் தீர்மானம் செய்தனர்.

தமிழ்நாட்டுச் சிறுவர்கள் இன்று பிற மாகாணச் சிறுவர்களைவிட எவ்விதத்திலும் பின் நிற்கவில்லை. ஊர்வலங்களிலும் கூட்டங்களிலும் அவர்கள் பெரும் பங்கெடுத்துக் கொள்கிறார்கள். கேரளத்தைப் போலவே தமிழ்நாட்டிலும் சிறுவர்களை ஸ்தாபன ரீதியாக ஒன்றுபடுத்த வேண்டும். அவர்கள் வருங்காலத்தின் சங்க நாதம்.

சென்னை, நெ. 2, ஜோன்ஸ் லேனில் "ஜனசக்தி" அச்சுக்கூடத்தில் பி. ராமமூர்த்தியால் அச்சிடப்பட்டுப், பிரசுரிக்கப்பட்டது.